கவிதைத் திறனாய்வு நூல் வரிசை- 5



## கவிஞர் முத்தமிழ் விரும்பியன்

# பயணக் கவிதைகள்

(ஆய்வுக்கட்டுரைத் தொகுதி)

முனைவர் செ. இராஜேஸ்வரி



சந்திரோதயம் பதிப்பகம்
மதுரை. Ph. 7010997639

கவிதைத் திறனாய்வு நூல் வரிசை - 5

# கவிஞர் முத்தமிழ் விரும்பியின்
# பயணக் கவிதைகள்

*முனைவர் செ. இராஜேஸ்வரி* M.A., M.Phil., Ph.D.,



## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்* |
| துறை | : | *கவிதைத் திறனாய்வு* |
| ஆசிரியர் | : | *முனைவர் செ. இராஜேஸ்வரி* |
| வடிவமைப்பு | : | *செ. மீனாட்சி* |
| பதிப்பாளர் | : | *சந்திரோதயம் பதிப்பகம்*<br>*3/422, திருவள்ளுவர் தெரு*<br>*தினமணி நகர், மதுரை – 625 018* |
| பதிப்பு | : | *டிசம்பர், 2021* |
| மொழி | : | *தமிழ்* |
| பக்கங்கள் | : | *88* |
| விலை | : | *Rs.200/-* |

- - - - -

| | | |
|---|---|---|
| Book | : | Muththamizh Virumbi's<br>Payanakkavithaikal |
| Subject | : | Poetry Criticism |
| Author | : | Dr.C.Rajeswari, M.A., M.Phil., Ph.D., |
| Designer | : | C. Meenatchi |
| Publisher | : | Chandrothayam Pathippagam<br>3/422, Thiruvalluvar Street<br>Dinamani Nagar, Madurai-625 018 |
| Publish | : | December, 2021 |
| Pages | : | 88 |
| Price | : | Rs.200/- |

# அன்புக் காணிக்கை



*இந்நூல் பயண ஆர்வலர்,*
*இயற்கைநல ஆர்வலர்*

**S. அகில் ரிஷி ராஜசேகரனுக்கு**

*அன்புக் காணிக்கை.*

## பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்

*1.* பூ மர நிழல்

*2.* வறட்சியின் பாடல்கள்

*3.* பார்வையில் பூத்த நிலா

*4.* உன்னோடு உரையாடுதல்

*5.* காதல் மொழி

*6.* தேனடையும் வரலாறு

*7.* நுண்கலை மருத்துவன் - விடுபட்ட சில குறிப்புகள்

# பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி



பொறிஞர்கவிஞர், கட்டுரையாளர், பாடலாசிரியர், நாடக நடிகர், குறும்பட நடிகர், திரைப்பட நடிகர், ஆவணப்பட இயக்குனர், சிறுகதையாளர், நாவலாசிரியர், நாடகாசிரியர், இலக்கியச் செயல்பாட்டாளர், திரைக்கதை ஆசிரியர், வசனகர்த்தா, இயக்குனர், சொற்பொழிவாளர், விமர்சகர் முத்தமிழ் விரும்பி தஞ்சை மண்ணை சேர்ந்தவர். கோவை பி.எஸ்.ஜி தொழில்நுட்ப கல்லூரியில் பொறியியல் படித்தவர். திருச்சி பெல் நிறுவனத்தில் துணை இயக்குனராக பணியாற்றி வருகிறார்.

நெருஞ்சி இலக்கிய இயக்கத்தை நிறுவி ஆண்டுதோறும் கவிஞர் பத்திரிகையாளர் எழுத்தாளர் எனப் பல துறை சார்ந்தவர்களுக்கும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்து வருகிறார்.

நெருஞ்சி என்னும் காலாண்டு இலக்கிய இதழை நடத்திவருகிறார். தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகத்தின் கல்வி குழு உறுப்பினர் ஆவார். கோவை பாரதியார் பல்கலைக்கழகத்தின் முன்னாள் ஆட்சி மன்றக் குழு உறுப்பினரும் ஆவார்.

கவிஞருடைய பூ மர நிழல், திட்டிவாசல் பெண்ணொருத்தி, உன்னோடு உரையாடுதல், காதல் மொழி, பார்வையில் பூத்த நிலா, தேனடையும் வரலாறு ஆகிய கவிதை நூல்கள் ஆங்கிலத்தில் **Shade of the Flowing Tree, Songs of Dryness, Speaking with You, The Language of Love, A Lady at the Little Gate, Honey Hive** முனைவர் செ. ராஜேஸ்வரி அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு, சென்னை எமெரால்டு பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளன. **"Ambrosial Kiss"** என்ற மொழிபெயர்ப்புக் கவிதை திறனாய்வு நூல் ஒன்றையும் எமெரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

கவிஞருடைய கவிதைகள் குறித்து ***"பூமர நிழலின் களமும் காலமும், முத்தமிழ் விரும்பியின் பாடுபொருளும் பாசப்பொருளும், '2020 தை மாதத்தில் இன்று' கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு, கவிதையில் காதல், முத்தமிழ் விரும்பியின் கவித் திறன்"*** ஆகிய திறனாய்வு நூல்களை மதுரை, சந்திரோதயம் பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

கவிஞருடைய பூமர நிழல் கவிதைத் தொகுப்புக்கு ***'கவிதை உறவு 2004'*** முதற் பரிசு வழங்கியது. மேலும் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் மற்றும் நியு செஞ்சுரி புத்தக நிறுவனம் இணைந்து நடத்திய ***'பாரதி விழா 2004'*** பரிசுப் போட்டியிலும் பரிசு பெற்றது.

*கவிஞர் கடற்குதிரை பதிப்பகத்தின் மூலமாக "காற்று வரைந்த ஓவியம் – கவிஞர் பேராசிரியர். சிற்பி பாலசுப்ரமணியம், காதல் சொல்ல – நித்யன் மணியரசு, மிதக்கும் காடு – தென்பாண்டியன், நிறமாறிய தூரிகை – பா. மீனாட்சி சுந்தரம், வெற்றி – தி.ரா.நமசிவாயம், பாரதி முதல் கனிமொழி வரை – பேராசிரியர். தே. ஞானசேகரன், மாயப் பூவெளி – கவிஜீவன், பருந்துகளை போலான தேன் சிட்டுகள் – பண். இறை, பெரியார் பார்வையில் திருக்குறள் – திருக்குறள் எஸ்.சோமசுந்தரம்,* **Another Portrait of the Brush – Tamil Poem translated by Ba. Mee., Thiruk-kural – A translation in Santali Language by Rev. Fr.V.Richard, and** *பண்பாட்டு நகர்வுகள், (வெளியீடு – நெருஞ்சி இலக்கிய இயக்கம், தஞ்சை.) ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.*

*மலேசியாவில் மலாய் பல்கலைக்கழகத்தில் நடந்த விழாவில் கவிஞருக்குத் தமிழ்* ***இலக்கியச் செம்மல்*** *என்ற விருது வழங்கப்பட்டது. இலங்கையில் யாழ்ப்பானம் பல்கலைக்கழகம் கவிஞருக்கு* ***'திருவள்ளுவர் விருது'*** *வழங்கி சிறப்பித்துள்ளது. இந்த ஆண்டு (2021) தமிழ்நாடு அரசு, பாரதியார் பிறந்தநாள் விழாவில் அவர் பிறந்த ஊரான எட்டையபுரத்தில் நடந்த போது* ***"பாரதி சுடர்"*** *என்ற விருது வளங்கப்பட்டது.*

*கவிஞருடைய, நேற்றின் பாதங்கள், தஞ்சை பெருவுடை நிலம் ஆகிய கவிதை நூல்கள்*

விரைவில் அச்சில் வெளி வரவிருக்கின்றன இவ்விரு கவிதைத் தொகுப்புகளும் கட்டுரைகளும் விரைவில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட இருக்கின்றன.

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளை கோவை பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையும் கொங்கு கலை அறிவியல் கல்லூரி போன்ற வேறு சில தன்னாட்சி கல்லூரிகளும் பாடமாக வைத்துள்ளன. தமிழ் ஆராய்ச்சியாளர்கள் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.



## நூலாசிரியர் முனைவர் செ. இராஜேஸ்வரி



*முனைவர்* **செ. இராஜேஸ்வரி** *மொழிபெயர்ப்பாளர், மொழியியலார், எழுத்தாளர், எம்ஜிஆர் திரைப்பட ஆய்வாளர், கல்லூரிப் பேராசிரியர், சமயப் பண்பாட்டு ஆய்வாளர், மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர்.* **புலமை, செந்தமிழ், வளர்தமிழ், ஓங்குதமிழ், நா.வா.வின் ஆராய்ச்சி** *போன்ற ஆய்விதழ்களில் இவருடைய ஆய்வு கட்டுரைகள் வெளிவந்தன.* **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** *என்ற ஆய்வு கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைக்கழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.*

*1988 முதல் தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.*

*1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப்* [Associate Editor] *பணியாற்றினார். ஜப்பானிய மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில்*

ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளிவந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.

1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறைதிரு இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி **ஸ்ரீ**மத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி ஆகிய கல்லூரிகளில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.

2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது

தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க Tamil for Non-Tamils என்ற பாடநூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாடநூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க Easy English என்ற ஆங்கிலப் பாடநூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.

எம்.ஜி.ஆர். பற்றி ***“ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100”*** என்ற தலைப்பில் விகடன். காமில் முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் **www.tamilauthors.com** என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி. ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். தற்போது வெற்றித் திருமகன் என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் இருபத்தோர் நூல்கள் வெளிவந்துள்ளன.

தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ்விரும்பி அவர்களின் எட்டு கவிதை நூல்களை இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களைச் சென்னை

எமரால்டு பதிப்பகமும், ஆஸ்திரேலியாவின் மூன்ஸ்டோன் பதிப்பகமும் வெளியிட்டுள்ளன.

தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ்விரும்பி அவர்களின் நூல்களின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றை நான்கு **கவிதைத் திறனாய்வு நூல்களாக** வெளியிட்டார்.

சமூக பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை என்ற தலைப்பில் ஆறு நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

கோவை பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மேனாள் தலைவர் பேரா. முனைவர் ஞானசேகரனின் ஐந்து நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். இவற்றில் முதல் மூன்று நூல்களை மூன்ஸ்டோன் பப்ளிகேஷன்ஸ் வெளியிட்டுள்ளது.

மொழிபெயர்ப்பு மற்றும் ஆய்வு நூல் வரிசையில் இவர் ஐந்து நூல்களை எழுதியுள்ளார். முதல் நூலை நெருஞ்சி இலக்கிய இயக்கமும் மற்ற நூல்களை, சந்திரோதயம் பதிப்பகமும் வெளியிட்டது.

இவர் **Love Thamizh** என்கிற பன்மொழி மின்னிதழின் ஆசிரியர். இவ்விதழில் தமிழ் மொழி, வரலாறு, பண்பாடு குறித்த ஆங்கிலக் கட்டுரைகளை வெளியிடுகிறார். தமிழ் மற்றும் பிற மொழிகளுக்கு இடையில் மொழி பெயர்க்கப்பட்ட கவிதைகளை இந்திய மற்றும் ஐரோப்பிய மொழிகளில் வெளியிடுகிறார்.

**சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனிதநேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்** என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். இவர் எழுதிய சிறுகதைகள் 'அமராவதியின் காதல்' என்ற பெயரில் தொகுக்கப்பட்டு வெளிவந்தது. நெருஞ்சி இலக்கிய இதழில் இவரது கட்டுரைகள் வருகின்றன. இவர் எழுதிய "என்னோட ராசி நல்ல ராசி" என்ற தொடர் வாரந்தோறும் **தினகரன்** நாளிதழின் ஜோதிட மலரில் வருகிறது. மாதமிரு முறை வரும் **ஆன்மீகம் இதழில்** (தினகரன் வெளியீடு) இவரது கட்டுரைகள் தொடர்ந்து இடம் பெறுகின்றன.

ஆஸ்திரேலியாவின் சிட்னி நகரில் இருந்து ஒளிபரப்பாகும் Focus Thamil தொலைக்காட்சி மற்றும் வானொலியில் புதன்கிழமை தோறும் என்றும் வாழும் எம்.ஜி.ஆர். நிகழ்ச்சியில் உரையாற்றுகிறார். ஸ்ரீலங்காவின் DAN TV யின் ஆன்மிகக் கிளையான Om டிவியில் இவரது விநாயகர் பற்றிய உரை ஜனவரி 2022 முதல் ஒளி பரப்பாகின்றது.



# உள்ளடக்கம்





முனைவர் செ. இராஜேஸ்வரி

# 1. பயணக் கவிதைகள்

கவிஞர் முத்தமிழ் விரும்பி பன்முகத் திறனாளர் அவர் இதுவரை எட்டுக் கவிதைத் தொகுதிகளை வெளியிட்டுள்ளார். அக் கவிதைகளில் காணப்படும் பயணம் பற்றிய கவிதைகளை மட்டும் முதன்மை ஆதாரமாகக் கொண்டு உள்ளடக்கப் பகுப்பாய்வு நிகழ்த்தி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. அவருடைய கவிதைத் தொகுதியில் வறட்சியின் பாடல்கள் என்ற தொகுதியில் 6 கவிதைகளும் தேனடையும் வரலாறு என்ற தொகுதியில் ஏழு கவிதைகளும் காதல் மொழி என்ற தொகுதியில் ஒரு கவிதையும் நுண்கலை மருத்துவன் என்ற தொகுதியில் மூன்று கவிதைகளும் உன்னோடு உரையாடுதல் என்ற தொகுதியில் மூன்று கவிதைகளும் பயணம் பற்றிய கவிதைகளாக அமைந்துள்ளன.

பயணம் என்று குறிப்பிடும் போது ஆங்கிலக் கவிஞர்கள் வாழ்க்கையையும் பயணம் என்று குறித்துப் பல உருவகக் கவிதைகளைப் படைத்துள்ளனர். அது தவிர சாலை வழிப்பயணம் கடல் வழிப் பயணம், ஊர் காணும் பயணம், விரக்திப் பயணம் என்று பல்வேறு கருப்பொருட்களைக் கொண்டு பயணக் கவிதைகள் படைக்கப்பட்டுள்ளன.

ராபர்ட் லூயிஸ் ஸ்டிவன்சன்

May the road rise up to meet you
May the wind the always at your back
May the sun shines warm upon your face
The rainfall soft upon your fields
And until we meet again
May God hold you in the palm of His hand

என்று பயணம் சிறக்க இறைவனை வேண்டுகிறார். ஆனால் முத்தமிழ் விரும்பி எந்தக் கவிதையிலும் தன் பயணம் சிறக்க இறைவனை வழிபட வில்லை. தன் பயணத்தை இரசித்து மகிழ்ந்து பிறரோடு அம்மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளும் கவிதைகளை இயற்றியுள்ளார்.

இவரது கவிதைகளில் பயணத்தின்போது அவருக்கு ஏற்பட்ட அனுபவம், அவருடைய மனநிலை, பயணத்தின் போது அவர் கண்ட கேட்ட தகவல்கள், கூர்ந்து கவனித்த நிகழ்வுகள்,

உடன் பயணித்த பயணிகள், சென்று சேர வேண்டிய இடம் குறித்த நினைவுகள், பயணத்தில் காரணமாகவும் அல்லது அதற்கு முன்னும் பின்னும் ஏற்படுகின்ற உள்ளத்து உணர்ச்சி, பயணத்தின் செயல்பாடு அல்லது நிகழ்வு, பயணம் செல்லும் பாதையின் விளக்கம் இவற்றோடு வாழ்க்கையையும் பயணமாகக் காண்கின்ற போக்கு ஆகியன பாடுபொருளாகின.

பயணம் என்பது ஓர் இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு இடம் மாறுகின்ற ஒரு செயல்பாடாகும். பொதுவாக மனிதர்களின் இந்நகர்வைத் தான் பயணம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றோம்.

பிழைப்புக்காக அல்லது தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஓரிடத்திலிருந்து, ஒரு மாநிலம் அல்லது ஒரு நாட்டில் இருந்து இன்னொரு இடத்திற்கு நகர்ந்து செல்லும் போது அதனைப் புலம்பெயர்தல் என்று அழைக்கின்றோம். பறவைகளும் விலங்குகளும் இவ்வாறு ஓரிடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு மாறும்போது பறவைகளின் இடமாற்றத்தை வலசை என்போம். சில சமயங்களில் குறிப்பிட்ட ஒப்பந்தப் பணிகளில் ஈடுபடுவதற்காக சில மாதங்கள் அல்லது சில ஆண்டுகள் மட்டுமே இடம் மாறி செல்வதுண்டு.

கரும்புத் தோட்டத்தில் தேயிலைத் தோட்டத்தில், சாலைப்பணியில், வேலை செய்வதற்காக இவ்வாறு ஊர் ஊராக பணியாளர்களை அழைத்துக்கொண்டு போய் பணித் தளத்தில் வைத்து இருந்து பணி நிறைவுற்றதும் திருப்பி அனுப்பி வைப்பர். இத்தகைய இட நகர்வுகள் பயணம் என்று அழைக்கப்பட்டாலும் முத்தமிழ் விரும்பி தன் கவிதைகளில் அவருடைய பயணத்தைப் பற்றிய தகவல்களை மட்டுமே கருப்பொருளாகக் கொண்டுள்ளார்.

ஒரு பாதையில் நடந்து செல்வதை நடைப்பயணம் என்கின்றோம மகிழுந்தில், பேருந்தில், சென்றால் அது சாலைப் பயணம் என்றும் தொடர்வண்டியில் சென்றால் அதனை இரயில் பயணம் என்றும் குறிப்பிடுகிறோம். முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் பேருந்து பயணத்தை விட மகிழுந்துப் பயணமும் இரயில் பயணமும் அதிகம் கவிப் பொருளாகி உள்ளன.

## பயணத்தில் குரலும் காட்சியும்

நடந்து போகும் ஒருவனுக்கு ஒரு குரல் கேட்கின்றது. அது ஒரு பறவையின் குரல் என்பதை அவனால் ஊகித்து அறிய முடிகின்றது. ஆனால் அவன் சுற்றிலும் அண்ணாந்து பார்க்கும் போது எங்கேயும் அந்த பறவை காணப்படவில்லை.

மரத்தின் உச்சியில் எங்கோ இருக்கின்றது என்பதை அவனால் உணர முடிகின்றது. ஆனால் மரத்தின் இலைகளில் பறவை மறைந்து இருக்கின்றது. குரல் கேட்கின்றது ஆனால் உருவம் தெரியவில்லை. இத்தகைய அனுபவத்தைப் பல கவிஞர்கள் கவிதையாக வடித்துள்ளனர். ஆங்கிலத்தில் பி. பி. ஷெல்லி எழுதிய இந்த ஸ்கைலார்க் (Skylark), வில்லியம் வர்ட்ஸ்வரத் இயற்றிய Ethereal minstrel போன்றன ஏறத்தாழ இக்கவிப் பொருளைக் கொண்டவை. அவர்களின் கவிதையில் பறவையைப் பற்றிய விரிவான வர்ணனைகளும் உவமைகளும் காணப்படுகின்றன. முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் பறவையின் வர்ணனை விளக்கம் ஆகியன காணப்பட்டாலும் கவிதையை சொல்லியிருக்கும் பாங்கு இப் பாடுபொருள் பறவையைப் பற்றியது மட்டும் அல்ல, பறவையின் மூலமாக அவர் வேறு ஒரு தத்துவப் பொருளைச் சொல்ல விரும்புகின்றார் என்ற கருத்தும் தொனிக்கிறது. இத்தகைய தொனி எனப்படும் கவிதா ரசம் குறித்து துவன்ய லோகம் என்ற நூல் விரித்துரைக்கிறது. தொனி எனப்படுவது நேரடி பொருள் அல்ல அந்த நேரடி பொருளுக்குள் புதைந்து இருக்கும் ஓர் உணர்வு.

அப்படியிருக்குமோ இப்படியிருக்குமோ என்ற எண்ணமே தொனியின் இரசம் அல்லது சுவை. அச்சுவையைக் குறித்துக் காட்ட முடியுமே தவிர விளக்கிச் சொல்ல இயலாது. கவிஞர்

*முத்தமிழ் விரும்பியின்* ***ஒரு பறவையின் இருத்தலியம்*** *என்ற கவிதை*

அதிகாலைப் பொழுதை உணர்த்தும்
ஒளிக் கிண்ணத்தில் வழியும்
ரசக்கிண்ணமாய்
உன் குரல்

எனத் தொடங்கி இறுதியில்

நினைவில் ஏற்றிக் கடக்கிறேன்
ஆனாலும்
உன் பெயர் வேறென

*- வறட்சியின் பாடல்கள்*

*என்று நிறைவு பெறுகிறது. இங்குக் கவிதையின் தொடக்கத்தில் பறவையின் குரலை அழகான உவமை ஒன்றினால் விளக்கி, பின்பு கவிதையின் நிறைவில் 'நினைவில் ஏற்றிக் கடக்கிறேன்' என்ற வரியை வாசித்துப் பார்க்கும்போது பறவை இருக்கும் இடத்தின் வழியே நடந்து செல்லும் ஒருவன் பறவையின் குரலை மனதில் வைத்தபடி அந்த இடத்தைக் கடந்து செல்கின்றான். ஆனாலும் அவனுக்கு அப் பறவையின் பெயர் என்னவென்று தெரியவில்லை. அந்தப் பறவையின் பெயர், அதன் வண்ணம், வடிவம், இயல்பு என எதுவுமே தெரியாமல் குரலை மட்டும் கேட்டபடி குரலை மனதில் இருத்திச் செல்கின்றான்.*

குரல் மட்டும் கேட்டு உரு மறைக்கும் விந்தையை இரசித்த பேரா. ஜிரேஷ் இக்கவிதை நூலின் ஆங்கில மொழிபெயர்ப்புக்கு வழங்கிய அணிந்துரையில் இக்கவிதையின் அழகைப் பின்வருமாறு பாராட்டினார். அவர் ஆங்கிலப் பேராசிரியர் என்பதால் ஆங்கிலக் கவிதைகளுடன் ஒப்பிட்டு மகிழ்ந்தார்.

The book opens illustrating the sweet voice of a bird which is being compared to a mercury bowl. The bird in the opening poem resembles Wordsworth's 'Ethereal minstrel!' or Shelley's 'blithe Spirit!'. The bird is invisible and its voice alone is an inspiration:

'Though face not visible
That little flame
Shakes the branches of the neem
A honey voice'

கதிரறுக்கும் ஒற்றைக் குமரி என்ற கவிதையில் வில்லியம் வர்ட்ஸ்வர்த் தானே தனியாக பாடிக்கொண்டு கதிர் அறுக்கும் ஒரு பெண்ணைப் (Solitary Reaper) பாடுபொருள் ஆக்கினார்.

அவள் என்ன பாடுகிறாள்
யாருமே சொல்ல மாட்டீர்களா?
முறையீடுகளோ?
முன்பு நடந்த போரின்
பழைய துயரங்களோ?

அல்லது
இன்றைய காலத்தின்
பழகிய சாதாரண விஷயங்களோ?
முந்தைய இயற்கைத் துயர்
கஷ்டம், வலி, வேதனை,
அல்லது
இனி வரக்கூடியவையோ?
எதுகுறித்துப் பாடுகிறாள்?

எது குறித்துப் பாடினாலும்
இவ் இளம்பெண்ணின் பாட்டுக்கு
முடிவே இல்லை போலும்
கதிர் அரிவாளைப் பிடித்துக்
குனிந்து வேலை செய்தபடியே
அவள் பாடுவதைப் பார்க்கிறேன்
அதைக் கேட்கும் போது
செயலற்று நிற்கின்றேன்

நான் மலையில் ஏறிச் செல்லும் போது
என் இதயத்தில்
நின்றிருந்த அந்த இன்னிசை
அதன்பிறகு
வெகுகாலம்
கேட்கவே இல்லை

*- சென்றிடுவீர் எட்டுத்திக்கும், மொ.பெ. செ. இராஜேஸ்வரி*

*என்று முடிக்கிறார். இக்கவிதையில் கவிஞர் பாடுகின்றவளின் உருவத்தைப் பார்க்கின்றார்.*

*அந்தப் பெண்ணின் குரலைக் கேட்கின்றார். அதை மனதில் நிறுத்தியபடி தன் வழியை நடக்கின்றார். ஆனால் ஒரு பறவையின் இருத்தலியல் என்ற கவிதையில் அவ்விடத்தைக் கடந்து செல்லும் ஒரு பயணி பறவையின் குரலைக் கேட்கின்றான். பறவையின் உருவத்தைக் காணவில்லை. ஆக ஒரு பயணத்தின்போது சில குரல்கள் கேட்கின்றன உருவம் தெரியவில்லை சில வேளையில் உருவம் தெரிகின்றது, குரல் கேட்பதில்லை. முத்தமிழ் விரும்பியின் இன்னொரு கவிதை இதற்கு சான்றாக அமைகின்றது.*

*பெருவழிப் பாதையில் கண்ணகியும் கோவலனும் நடந்த ஊரைத் தாண்டி நிகழ்கிறது பயணம். அவ்வாறு நீண்டு செல்லும் பயணத்தில் வழியில் பார்த்த மனிதர்கள் பேசுவது எதுவும் கேட்கவில்லை ஆனால் அவர்களின் உருவங்கள் தெரிகின்றன. ஒரு பறவையின் இருத்தலியம் குரலை காட்டுகின்றது உருவத்தை காட்டவில்லை. பெருவழிப் பாதையில் என்ற கவிதை உருவங்களை மட்டும் காட்டிச் செல்கின்றது அவர்களின் குரலைப் பயணி கேட்கவில்லை*

பர்மா கடையில்
கடைசி வாடிக்கையாளர் தனது வாகனத்தைத்
தள்ளி விசையூட்டுகிறார்

சாத்தூரில்
தேனீர் கடை விளக்கொளியில்
சில தலைகள்
தேர்தல் நேரம்

*- சென்றிடுவீர் எட்டுத்திக்கும், மொ.பெ. சி. இராஜேஸ்வரி*

*தேர்தல் நேரத்தின் போது பத்து மணிக்குக் கடையை அடைத்துவிட்டு அங்கு வெளியே சிலர் மட்டும் நின்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். இக்காட்சியை மகிழுந்தில் பயணிக்கும் பயணி காண்கிறார். அவர்கள் பேசுவது கேட்கவில்லை. இம் முரண்பாட்டை நாம் பயணத்தில் காண்கிறோம் பயணத்தின் போது சில காட்சிகள் கண்ணில் படும். சில சமயம் சிலர் பேசுவது கேட்கும். ஆனால் அவர்கள் உருவம் தெரிய வாய்ப்பில்லை.*

*ஒரு பறவையின் இருத்தலியம் என்ற கவிதை பறவை கிளைகளின் நுனியில் இருக்கக்கூடும் என்ற யூகத்தையும் ஏற்படுத்தும்*

உன் பறத்தலறியாவிடினும்
கிளைகளின் நுனியில் இருப்பாய்
உருளும் இலைகளில் பச்சைக்கிளியனத்
தளிர்கள் தரும் மூக்கின் செம்மை
இங்குமங்குமாய் கோடுகளிழுக்க
வடிவம் கண்டு மயங்கிடும் பொழுதில்
நினைவிலேற்றிக் கடக்கின்றேன்.

*- சென்றிடுவீர் எட்டுத்திக்கும், மொ.பெ. சி. இராஜேஸ்வரி*

இவ்வாறெல்லாம் அந்தப் பறவை இருக்கக்கூடும் என்று தன் மனதுக்குள் ஒரு கற்பனை வடிவத்தை உருவாக்கி மயங்கி அந்த மகிழ்ச்சியை நினைவில் ஏற்றிக் கொண்டு அந்த இடத்தை விட்டுக் கடந்து செல்கின்றான் ஒரு நடைப்பயணி. மனதுக்குள் ஓர் உருவம் சமைத்து விட்டான்; குரலையும் கேட்டுவிட்டான்; ஆனால் அந்த உருவத்துக்கும், குரலுக்கும் உரியவர் பெயர் தெரியவில்லை. இது பறவையாக மட்டுமே இருக்க வேண்டிய அவசியமில்லை. அண்டை வீட்டுப் பெண்ணாக இருக்கலாம், அடுத்த வீட்டு ஆசிரியராக இருக்கலாம், எதிர்வீட்டுக் குழந்தையாகவும் இருக்கலாம். குரலை வைத்து அந்த உருவத்தை கற்பனையில் வடிவமைக்கும் மனிதனின் விந்தையான செயல்பாடும் அதை நினைவில் ஏற்றி மகிழும் உற்சாகமும் கவிதையாகி உள்ளது. குரலைக் கேட்ட மாத்திரத்தில் அதற்கு ஓர் உருவம் சமைத்து போகின்ற வழியிலேயே ஒரு உற்சாகத்தை மனதில் உருவாக்கி மகிழ்ச்சியான நினைவுகளைச் சுமந்தபடி செல்கின்ற மனித மனத்தின் அகண்ட நிலை பற்றிய கவிதை இது. வெறும் பறவை பற்றியது என்று பொருளைச் சுருக்கக் கூடாது.

குரல் கேட்டு பரவச நிலை பெற்ற வழிநடைப் பயணியை போல நெடுஞ்சாலையில் ஒரு விபத்தின் அடையாளத்தைக் கண்டு அதிர்ந்து

*அந்த நினைவுகளால் மனம் வருந்தி அந்த இடத்தைக் கடந்து சென்ற இன்னொரு பயணியை மீட்டல் என்ற கவிதையில் காணலாம்.*

**நெடுஞ்சாலை**

நெடுஞ்சாலை நடுவே விபத்து
சுண்ணமிட்ட கோட்டோவியத்தினுள்
காய்ந்த குருதிக் கறையை
நக்கிச் சுவைக்கிறது
நாய்

*- வறட்சியின் பாடல்கள்*

*இக்கவிதை நெடுஞ்சாலையில் பயணிக்கும் பயணிகள் விபத்து நடந்த இடத்தைப் பார்த்து இறந்த கிடந்த உடலைச் சுற்றி வரையப்பட்ட சுண்ணாம்புக் கோட்டையும் பார்த்து மனம் வருந்தும் வேளையில் அங்கிருந்த இரத்தக்கறையை ஒரு நாய் நக்கிச் சுவைப்பதைப் பார்க்கும்போது கவிதை முரண்சுவை பெறுகிறது. அச்சம் தரக்கூடிய ஓர் இடத்தில் ஒரு காட்சியில், கிடந்த உலர்ந்த குருதி நாயின் நாவுக்கு சுவையானதாக அமைகின்றது. இங்கு மனிதரின் அச்சமும் நாயின் மகிழ்ச்சியும் கலந்து சுவைமுரண் உண்டாக்குகிறது.*

*நாயும் மனிதனும் இடம்பெறும் இன்னொரு கவிதையில் அச்சமும் சினமும் இடம்பெறுகிறது. மோட்டர் பைக் பயணி ஒருவன் பிராய்லர் சிக்கன்*

*எனப்படும் கோழிக்கறியை வாங்கிக் கொண்டு வருகின்றான். அப்போது ஒரு பல்லில்லாத உயரமான நாய் அவனை விரட்டித் துரத்துகிறது. அவன் அஞ்சியபடியே அந்த இடத்தை விட்டு வேகமாகவண்டியை ஓட்டிக்கடக்க முயல்கிறான். அந்த நாய் வெகு தூரம் அவனைப் பார்த்து குரைத்துக் கொண்டு சென்று விட்டு பிறகு ஓய்ந்துவிட்டது. நாயின் உயரமும் அதனுடைய இயல்பும் அது தெரு நாய் அல்ல, கலப்பின நாய் என்பதை உணர்த்துகிறது. ஆனால் அந்த நாய்க்கு பல் இல்லாதது அது எலும்புக்கறி சாப்பிடாமல் பிராய்லர் கோழிக்கறியைத் தொடர்ந்து சாப்பிட்டு வருவதை சுட்டுகிறது.*

**வேறு**

பெரு நகர மையத்தில் இருக்கும்
மிகப்பெரிய வணிக வளாகத்தில்
உச்சித்தளத்திலிருந்து இறங்கும்
மனிதனின் கையிலிருந்தது
நெகிழி உறையில்
எலும்புகளற்ற கறிக்கோழியின்,
கருஞ்சிவப்பு நிற இறைச்சித் துண்டுகள்
வாகனமேறியவனை
கரும்புகை மறைக்கும் வீதியில்
குரைத்துத் துரத்தும் பற்களற்ற,
ஆளுயரக் கலப்பின நாய்

*- வறட்சியின் பாடல்கள்*

இக்கவிதையில் ஒவ்வொரு சொல்லும் இரத்தினச் சுருக்கமாக பயணியையும் நோயையும் விளக்குகிறது. பயணியின் அதிர்ச்சிக்குக் காரணம் இறைச்சித் துண்டுக்கு ஆசைப்பட்ட அந்த ஆளுயரக் கலப்பின நாய் குரைத்துக்கொண்டே அவனுடைய வாகனத்தைத் துரத்திச் செல்வதாகும். இக்கவிதையில் ஒருவன் வாகனத்தில் வந்து கடையில் ஒரு பொருளை வாங்கிக் கொண்டு சென்றாலும் கூட வழியிலிருக்கும் நாய்களுக்குப் பயந்து செல்ல வேண்டிய அச்சம் தரும் சூழ்நிலை பெரு நகரத்தின் மையப் பகுதியில் கூட நிலவுவதை கவிஞர் சுட்டிக்காட்டியுள்ளார்.

மகிழுந்தில் பயணம் செய்தாலும் இருசக்கர வாகனத்தில் பயணம் செய்தாலும் தெரு நாய்களின் தொல்லை பயணிகளுக்கு பேரச்சத்தை விளைவிக்கின்றது. இவ்வாறு சாலைப் பயணத்தில் ஏற்படும் அழகான மனதுக்கினிய உணர்வுகளையும், அச்சங்களையும் தொல்லைகளையும் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகளில் காணலாம்.

## கடந்து செல்லுதல்

பயணத்தின்போது கடந்து செல்லுதல் என்னும் பாடு பொருளில் **எளிதா?** என்ற தலைப்பில் ஒரு கவிதை அமைந்துள்ளது. இக்கவிதை கடந்து செல்லுதல் என்ற

*கருப்பொருளின் பல்வேறு பரிணாமங்களைப் பதிவு செய்துள்ளது.*

இதுவும் கடந்து போகும் என்பதனால்
கடத்தல் எளிது

கடந்து போகும்
பாதை, நேரம், தூரம்,
திசை, எளிதல்ல
என்பதும் எளிது.

கண்மூடிப் பார்த்தல்
பறத்தல் எளிதா
இக் கணம்?

- தேனடையும் வரலாறு

*இக்கவிதை பயணம் என்பது கடந்து செல்லுதல் என்பதைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. ஆனால் பயணம் இடத்துக்கு இடம் பெயர்வதாக மட்டுமல்லாது வாழ்க்கையில் ஒரு நிலையிலிருந்து அடுத்த நிலைக்குக் கடந்து செல்வதையும் குறிக்கிறது. கடந்து போகும் பாதையில் நேரம் தூரம் திசை எளிதல்ல என்ற வரிகள் கடந்து செல்வதற்கு ஒரு பாதை தேவை, அந்தப் பாதை கரடு முரடற்ற பாதையாக இருப்பது நல்லது; கடந்து செல்வதற்கு என்று ஒரு நேரம் இருக்கின்றது; அந்த நேரத்தில் கடந்து செல்வதுதான் பாதுகாப்பானதாக இருக்கும்.*

கடந்து செல்லும் தூரத்தை கணக்கில் கொள்ள வேண்டும்; தன்னால் கடந்து செல்லக்கூடிய தூரத்தைத் தான் ஒருவன் தன் பயணத்தில் மேற் கொள்ளவேண்டும். கடந்துசெல்லும் திசை மிகவும் முக்கியமானது. அலெக்சாண்டர் என்ற மாமன்னன் தன்னுடைய போர் வீரர்களை அழைத்துக்கொண்டு இந்தியாவுக்குப் படையெடுத்து வந்தபோது அவனுடைய பயணம் கால நிலையைக் கணிக்காத பயணமாக அமைந்து விட்டதால் அவன் வழியிலேயே மாண்டு போனான். போர்வீரர்கள் பனியிலும் குளிரிலும் அவதிப்பட்டு பாதி வழியிலேயே இறந்தனர். அவனுக்கு வெற்றி என்பது எட்டாக்கனியாகி விட்டது. எனவே ஓர் இடத்தை கடந்து செல்லுதல் என்பது பல வழிகளிலும் திட்டமிடப்பட்டதாக இருக்க வேண்டும். திட்டமிடப்பட்ட ஒரு பயணம் கடந்துசெல்லுவதை எளிதாக்கி இனிய தாக்கும் என்ற கருத்தை இக்கவிதை எளிதா? என்ற வினாவை எழுப்பி திட்டமிட்டால் எளிது தான் என்ற கருத்தை உணர்த்துகின்றது.

நகரப் பேருந்தில் பயணம் செய்யும் போது அதன் ஜன்னல் ஓரத்தில் அமர்ந்து இருப்பவர் பாதையெங்கும் பல காட்சிகளைக் கண்டு இரசித்தபடி செல்வார். அப்போது அவருக்குத்

*தெரிந்த முகங்கள் தென்பட்டாலும் கூட அவர்களைத் தெரிந்தவர் போலக் காட்டிக் கொள்ளாமல் தெரியாதது போல முகக் குறிப்பைக் காட்டலாம். இக்கருத்தை* ***பதிவில்*** *என்ற கவிதையில் காணலாம்.*

தெரியாத முகமொன்று
தெரிந்ததுபோல் கைகாட்ட
புரியாமல் தலையாட்டிப்
போனேன் நானும்

*- பூமர நிழல்*

*இது நகரப் பேருந்து பயணிகளுக்கு ஏற்படும் பொது அனுபவம். ஆனால் முத்தமிழ் விரும்பி ஒரு கவிதையில் நகரப்பேருந்து என்பதை ஓர் உவமையாகப் பயன்படுத்தியது புதுமையாகும்.*

*கவிதை தொடங்கும்போது பேருந்து பயணியின் அனுபவத்தைப் போலத் தொடங்கி வாழ்க்கையில் சந்திக்கும் மனிதர்களோடு ஏற்படும் உறவுகளையும் எதிர்வினையையும் விளக்குவது போல் அமைந்து பிறகு அது பேருந்து பயணம் அல்ல சமூக வலைத்தளப் பயணம் என்று சுட்டுகிறது. வலைத்தளத்தில் உலாவும் போது சக மனிதர்களோடு ஏற்படும் முரண்பாட்டால் அடிக்கடி உண்டாகும் சினம் நகரப்பேருந்தைப் போன்றது என்று உவமிக்கப்படுகின்றது,*

## நகரப்பேருந்து

.

.

.

நெருஞ்சியின் முட்கள்
மல்லிகை மொக்குகள்
இணையவெளியில்
இருப்பினும்
சினமென்னும் தைத்தல்
சுருக்கென
வந்து வந்து போகிறது

ஒரு
நகரப் பேருந்தைப் போல

- *தேனடையும் வரலாறு*

*சமூகவலைத்தளத்தில் நெருஞ்சி முட்களும் மல்லிகை மொட்டும் காணப்பட்டாலும் இடையிடையே சினமும் தோன்றுகிறது. சினம் எனனும் சேர்ந்தாரைக் கொல்லி என்றார் வள்ளுவர். இக்கவிதையில் சினம் சுருக் சுருக்கென்று தோன்றி முள்ளைப் போல குத்துகிறது. அடிக்கடி சினம் சுருக் சுருக்கென தோன்றுவது ஒரு நகரப்பேருந்து அடுத்தடுத்து வருவதைப் போல இருக்கின்றது. நகரப் பேருந்தை சினத்துக்கு உவமையாக்கி இருப்பது புதுமையானதாகும்.*

கவிதையின் தொடக்கம் பேருந்து பயணிகள் அனுபவமா அல்லது சமூக வலைத்தளத்தில் தனக்கு விரும்பிய விரும்பாத பதிவுகளைப் பார்த்துக் கடந்துசெல்லும் அனுபவமா என்ற வினாவை எழுப்புகின்றது. ஆங்கிலத்தில் பிரவுசிங் (browsing) என்ற சொல் உலா வருவதைக் குறிக்கும். பிரவுசர் என்பதன் தமிழாக்கம் உலாவி. சமூக வலைதளங்களில் ஒருவன் உலாவும்போது சில பதிவுகளைக் கண்டும் காணாமலும் செல்கின்றான். இது தற்காலத்தில் நவீன தொழில்நுட்பப் பயணம். இருந்த இடத்தில் இருந்தபடியே உலகைச் சுற்றி வரும் பயணம். நன்பர்களை வேண்டியவர்களை வேண்டாதவர்களைப் பார்த்து பேசி வரும் உலாப் பயணம். ஒரு பயணி பதிவுகளுக்குப் பதிலளிக்க விரும்பாமல் கடந்து செல்கின்றான் ஆனாலும் சிலவேளைகளில் அவனுக்கு அப்பதிவுகள் எரிச்சல் ஊட்டுகின்றன ஆக இங்குப்பயணம் என்பதும் கடந்து செல்வதும் பேருந்து பயணியைப் போல சமூக வலைதளங்களில் உலாவும் பயணிக்கு உண்டாகும் அனுபவத்தையும் உள்ளடக்கியதாகும். இவ்வாறாக கடந்து செல்லுதல் என்ற கருப்பொருளைக் கொண்டு முத்தமிழ் விரும்பி பல பயணக் கவிதைகளை இயற்றியுள்ளார்.



# 2. பயணக் கவிதைகளில் உணர்ச்சிப் புனைவு

*முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள் பயணத்தின்போது ஏற்படும் பல்வேறு உணர்ச்சிகளைக்கவிநயத்துடன்உணர்த்துகின்றன. இக்கவிதைகள் மகிழுந்தில் பயணிக்கும் ஒரு தனி மனிதனின் உணர்ச்சிகளைக் காட்டுகின்றன. தனது வேலையின் நிமித்தம் வேற்றிடங்களுக்குப் பயணிக்கும் போது மனதில் ஏற்படும் சோர்வும் திரும்பி வரும்போது உண்டாகும் உவகையையும் கவிப்பொருள் ஆக்குகின்றன. இவை ஊர் சுற்றிப் பார்க்கும் சுற்றுலா பற்றிய பயணங்கள் அல்ல.*

### *பயணச்சுமை*

*பயணம் என்பதே சுமையானது என்று 'பயணம்' கவிதை குறிப்பிடுகின்றது.*

**பயணம்**

பெட்டிகள்
பைகள்
துணிப்பைகள் அதிகரிக்க

களைப்படைந்து விடுகிறது பயணம்

*- நுண்கலை மருத்துவன் - விடுபட்ட சில குறிப்புகள்*

பயணம் செல்ல வேண்டும் என்று நினைக்கும் போதே அதற்கான ஆயத்தங்களில் மனம் சோர்ந்து விடுகிறது. கவிஞர் ந.ம.வீ. இரவியின் கவிதைகளில் ஒன்று

ஆயத்தங்களிலே
என் ஆயுள்
முடிந்துவிடும்

என்பதாகும். பயணம் மேற்கொள்ளும் முன்பு அதற்காக எடுத்துச் செல்லும் பெட்டிகள், பைகள் பைகளுக்குள் வைக்கப்படும் சின்னஞ்சிறு துணிப்பைகள் என இவற்றின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க இவற்றைச் சுமந்து செல்கின்ற களைப்பு இவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்ற பொறுப்பு ஆகியவை பயணம் தொடங்கும் முன்பே மனச் சோர்வை ஏற்படுத்துகிறது.

பயணத்தின்போதும் பயணத்தினாலும் ஒரு பயணியின் மனதில் உவகை, அழுகை, இரக்கம் எனப் பல்வேறு உணர்ச்சிகள் தோன்றுகின்றன. அவை பயணக் கவிதைகளின் உயிர் மூச்சாக விளங்குகின்றன. உள்ளத்தில் உருவாகும் உணர்ச்சிகளை தெள்ளத் தெளிந்த தமிழில் கவிநயத்துடன் எடுத்துரைப்பதே கவிதை ஆகும். இதனை Powerful overflow of spontaneous feelings என்பர்.

**உவகை**

*உவகை என்னும் மெய்ப்பாட்டுக்கு உணர்ச்சி வெளிப்பாட்டுக்குத் தொல்காப்பியர் சிறப்பு, நலன், காதல், வலிமை ஆகிய நான்கு. நிலைக்களங்களைக் குறிப்பிடுகிறார். தனக்கு முன்பு செல்லும் மகிழுந்தில் இருந்து ஒரு சிறு குழந்தையின் கை வெளியே தெரிகின்றது. அச் சிறு கையைக் காணும்போது பின்னால் வரும் காரில் இருப்பவருக்கு உண்டாகும்*

*மகிழ்ச்சி ஒரு கவிதையாக மலர்கின்றது. இது தொல்காப்பியர் விளக்கும் நலன் என்ற மெய்ப்பாட்டுக் களத்தின் அடிப்படையில் தோன்றிய உவகை அல்லது மகிழ்ச்சி ஆகும்.*

**அரும்புதல்**

போக்குவரத்துத் தேங்கி
முன் செல்லும் மகிழ்வுந்திலிருந்து,

கைவிசிறுகின்ற
சின்னஞ்சிறு விரல்களின்,
செஞ்சாந்து நகங்களில்
அரும்பி

வண்ணக் கண்ணாடிக் குடுவையெனத்
ததும்பும்

அந்தி மனசு

*- வறட்சியின் பாடல்கள்*

இக்கவிதையில் முன் செல்லும் மகிழுந்தில் இருந்து வெளியே தெரியும் சிறு குழந்தையின் சின்னஞ்சிறு விரல்களில் காணப்படும் நகப்பூச்சு என்பது வண்ணக் கண்ணாடி குடுவையை ஒத்துள்ளது. இதைக் கண்டதும் மகிழ்ச்சி பொங்கும் மனம் அந்தி மாலையின் மென்மையான பொழுதை ஒத்திருக்கின்றது. மாலை வேளையில் இலேசாக மனம் இருக்கும். மகிழ்ச்சியான காட்சியைக் காணும் போது இன்னும் மயங்கி மகிழ்ந்து இலேசாகிப் பொங்கித் ததும்புகிறது. இக்காட்சி கவிஞனின் உள்ளத்து உணர்ச்சி, கவியுணர்ச்சியாகி உருமாறும் கவிதைக் காட்சி ஆகும்.

வண்ணக் கண்ணாடிக் குடுவை நகப்பூச்சுக்கும், மயங்கும் அந்திப் பொழுது அழகில் மயங்கிய மனசுக்கும் உவமையாகின்றது. குழந்தையே ஒரு கவிதை. குழந்தையின் செஞ்சாந்து பூசிய சிவந்த கைவிரல் இங்குக் கவிப்பொருள் ஆகின்றது.

## அவலம்

சாலைப்பயணத்தில் சில அவலக் காட்சிகளும் கண்ணில் தென்படும். தேசிய நெடுஞ்சாலையில் பயணிக்கும் போது வழியில் இரயில் வண்டியின் லெவல் கிராசிங்கில் வண்டிகள் நிற்கின்றன. அப்போது வண்டிக்குள்

*இருந்து வெளியே பார்த்தால் சாலையோரத்தின் அவலக் காட்சி ஒரு கவிதை ஆகின்றது.*

**குறை நிலவு**

இளநீர்க் குலைகள்
நுங்கு
விற்காமலிருக்க
பலாச்சுளைகளில்
ஈக்களோடு
தேனீக்களும்

புதுப்பிக்கப்பட்ட
தேசிய நெடுஞ்சாலையில்,
உளுந்தூர்பேட்டை
தொடர்வண்டி, லெவல் கிராசிங்

அடைப்புக்குத் தெற்கே

குறை நிலவு

*- தேனடையும் வரலாறு*

*காருக்குள் இருந்து வெளியே நோக்கும் போது அங்கு இளநீரும் நுங்கும் குலை குலையாக விற்காமல் கிடக்கின்றது. பலாச்சுளைகளில் ஈக்களும் தேனீக்களும் மொய்க்கின்றன. காரணம் புதுப்பிக்கப்பட்ட அந்த நெடுஞ்சாலையில் வண்டிகள் நிற்காது. விரைவாகச் சென்று விடும். தொடர்வண்டி செல்லும்போது மட்டும் லெவல் கிராசிங்கில் பேருந்துகளும் மகிழுந்துகளும்*

*நிற்கும். அப்போது பழம் விற்பவர்கள் வண்டிகளின் அருகில் வந்து பழங்களை விற்பார்கள். வண்டியை விட்டு இறங்கிச் சென்றால்தான் இளநீரும் நுங்கும் வாங்கிப் பருக முடியும். எனவே இளநீரும் நுங்கும் விற்காமல் கிடக்கின்றன. சாலையோர வியாபாரிகள் மனக்குறையோடு இருக்கின்றார்கள். இக்கவலையோடு அண்ணாந்து பார்க்கும்போது அங்கு தன்னோடு பயணிக்கும் நிலவும் குறைப்பட்டதாகத் தோன்றுகிறது.*

## *வழித்துணையாக வரும் நிலா*

*கவிஞரது இரவுப்பயணங்களில் பயணக் கவிதைகளில் நிலவு ஓர் அங்கமாக ஒரு நண்பனாக கூடச் சேர்ந்து பயணிக்கின்றது. கவிஞரின் உணர்ச்சிகளை பிரதிபலிக்க நிலவின் தோற்றம் உதவுகிறது.*

## *பிரிவின் துயருணர்த்தும் நிலா*

*தமிழ்த் திரையிசையில் கண்ணதாசன் மன்னாதி மன்னன் படத்திற்கு நிலவைப் பார்த்து,*

நீயோ நானோ யார் நிலவே - அவர்
நினைவைக் கவர்ந்தது யார் நிலவே

*எனத் தொடங்கும் பாடலில்*

பிரிவின் துயரும் உறவின் சுகமும்
என்னைப்போல் உன் மனம் அறியாதோ

*என்று காதலி கேட்பதாக எழுதினார். நிலவு பிரிவின் துயரத்தையும் உறவின் சுகத்தையும்*

அறிந்து மனிதர்க்குப் பிரதிபலிக்கும் என்பது மரபு ரீதியான நடைமுறை ஆகும். இக் கவி மரபை முத்தமிழ் விரும்பியின் கவிதைகளிலும் காணலாம்.

## பிரிவுப் பயணம்

சங்க இலக்கியத்தில் திருமணத்துக்கு முன்பு தலைவன் பொருள்வயின் பிரிவு என்ற பிரிவை மேற்கொள்வான். அவன் தன் வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை ஈட்டி வந்த பிறகே தான் காதலித்த பெண்ணைத் திருமணம் செய்வான். பொருள்வயின் பிரிவு என்பது தலைவிக்கு வேதனை அளிக்கும். திருவள்ளுவர் இதனைக் குறிப்பிடும் போது தலைவியின் கூற்றாக

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றும்
நின் வல்வரவு வாழ்வார்க்குரை

என்றார். நீ போகவில்லை என்றால் என்னிடம் சொல் போவதாக இருந்தால் நீ போய்விட்டு திரும்பிவரும்போதுயார்உயிரோடுஇருப்பாளோ அவளிடம் சொல் என்று தலைவி கூறுகின்றாள். இதன் உட்கருத்து நீ என்னை விட்டுப் பிரிந்து சென்றால் நான் இவ்வுலகை விட்டுப் பிரிந்து செல்வேன் என்பதாகும். இவ்வாறு தலைவி சொல்லும்போது அவன் தன்னுடைய பயணத்தை ஒத்திப் போடுவான். இதற்குச்சங்க இலக்கியத்தில் செலவழுங்குதல் துறை என்று பெயர். இது ஒரு தற்காலிக ஏற்பாடு தான்.

*தலைவன் உறுதியாக பொருள்வயின் பிரியத் தான் ஆகவேண்டும். ஏனென்றால் சமூக அமைப்பில் பணிப் பகிர்வு என்பது ஆணுக்கு வேறாகவும் பெண்ணுக்கு வேறாகவும் இருப்பதனால்*

வினையே ஆடவர்க்கு உயிரே
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே

*என்பது மரபாகும். வேலைக்காக ஆண்கள் மனைவியைப் பிரிந்து செல்வது பல ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்தில் இருந்து வரும் சமூக நடைமுறையாகும். அவ்வாறு பிரிந்து செல்லும் போது அவர்கள் அடையும் வேதனை கவிப் பொருளாவது அன்றும் இன்றும் உள்ள கவி மரபும் ஆகும். இக்கவி மரபை முத்தமிழ் விரும்பியின் கவிதைகளிலும் காணலாம்.*

## *துண்டாடிய நிலா*

திருச்சிராப்பள்ளி சந்திப்பில்,

மலைக்கோட்டை தொடர்வண்டி
பிடிக்க
நடைமேடை எண் பார்க்க
நிமிர்ந்தால்

சரி பாதியாய்த்

துண்டாடிய நிலா
வெளிச்சத்தில்

பொருள்வயின் பிரிவு

மின்னணு யுகத்தில்
மின்னும்
சங்கப்பாடல்

பெய்த மழையால்
பட்டுத் தெறிக்கிறது

விட்டுப் பிரிந்து செல்லும் கண்ணீர்

*- தேனடையும் வரலாறு*

*இக்கவிதையில் கணவன் தன் மனைவியைப் பிரிந்து திருச்சியிலிருந்து சென்னைக்குச் செல்கிறான். அப்போது தொடர்வண்டி எந்த நடைமேடையில் நிற்கிறது என்று பார்க்க நிமிர்ந்தால் வானத்தில் அட்டமிச் சந்திரன் (அரை வட்ட நிலா) காணப்படுகிறது. அந்த இரயில் நிலையத்தில் ஒரு சங்கப் பாடலும் காணப்படுகிறது. அப்போது பெய்த மழைத் தண்ணீர் பிரிவுத் துயரால் வழியும் கண்ணீர்த் துளியில் பட்டுத் தெறிக்கின்றது. கணவனும் மனைவியும் இருவேறு இடங்களில் வசிக்கப் போகின்றனர் என்பதைக் குறிப்பாக உணர்த்தும் வகையில் முழு நிலவு இரண்டாகத் துண்டிக்கப்பட்டு அரை வட்டமாகத் தோன்றுகின்றது. அன்று எட்டாம் நாளான அட்டமி என்பதனால் நிலா பாதியாகக்*

காட்சியளிக்கின்றது. இதனைக் கவிஞர் ‘சரிபாதியாகத் துண்டாடிய நிலா’ என்றார்.

அவரவர் வாழ்க்கைச் சூழலையும் மனநிலையையும் பிரதிபலிக்கும் வகையில் நிலா காட்சி அளிப்பதாகப் பாடுவது தற்குறிப்பேற்றணி நயத்தைச் சேர்ந்ததாகும். இவ்வணி நலம் இவரது கவிதையின் தனித்தன்மையாகும்.

## உறவுப் பயணம்

சங்க இலக்கியத்தில் முல்லைத் திணையில் போர் வயின் சென்ற தலைவனும் தன் வினை முடித்துத் திரும்பும் தலைவனும் தேர்ப் பாகனை நோக்கி விரைந்து செல்க என் மனைவி எனக்காக காத்திருக்கிறாள் என்று பாடும் பாடல்கள் உண்டு.

இம் மின்னணு நூற்றாண்டிலும் தான் வந்த வேலை முடிந்ததும் விரைந்து தன் ஊருக்குத் திரும்பும் கணவன் தன்னுடைய விரைவை வானத்தில் இருக்கும் நிலவு கண்டு பொறாமைப்படுகின்றது என்ற தனது மனக்குறிப்பை இயற்கை நிகழ்வுக்கு ஏற்றி மகிழ்கிறான். இந்த நிலவு இன்னும் தேயட்டும் என்று கூறியவன் இவர்கள் தனிமையில் தேய்வதைப் போல இந்நிலவு தேயட்டும் என்கிறான். இக்கவிதையில் நிலவின் தேய்மானம் தற்குறிப்பேற்றணியால் அழகு பெறுகின்றது.

## இனியது கண்ணாட்டி

இந்த இரவு
இனியது கண்ணாட்டி

நீ இருக்கும் இடம் நோக்கி விரைந்து வருவதை
நிலவு பார்த்து
பொறாமையில் தேய்கிறாள்

பின்னிரவில்
கதவு திறந்தே இருக்கட்டும்

என் வருகை
இவளை மேலும்
தேய்க்கட்டும்

தனிமையில்
நாம்
தேய்வதைப் போல.

*- தேனடையும் வரலாறு*

*இக் கவிதைத் தன் மனைவியைப் பார்க்க வீடு திரும்பும் கணவனின் காதல் உணர்ச்சியை உள்ளக் களிப்பை உற்சாகத்தை உணர்த்துகிறது. இது உறவின் மகிழ்வை நிலவின் மீதேற்றிப் பாடிய மிகச்சிறந்த காதல் கவிதை ஆகும்.*

## *காட்சிப்புனைவும் உணர்ச்சிப்புனைவும்*

Judith Wright *என்ற அமெரிக்கப் பெண் கவிஞர் இயற்றிய புகழ்பெற்ற* Train journey *என்ற*

கவிதையில் இரயில் பயணத்தில் நிலவின் ஒளியை

Glassed with cold sleep
And dazzled by the moon
Out of the confusing
Hammering dark of the train
I looked and saw
Under the moon's cold sheet

என்று புனைந்துரைக்கிறார். அடுத்து, இரவில் பயணி விழித்துப் பார்த்த போது மரங்களின் மீது பொழிந்த நிலவொளி திடீரென அவற்றில் வெண்ணிற மலர்கள் பூத்திருப்பதைப் போலக் காட்சி அளித்ததை

I woke and saw
The dark small trees that burn
Suddenly into flowers
More lovely that the moon.

என்கிறார். இப் பயணக் கவிதையில் நிலவின் அழகும் குளிர்ச்சியும் அழகாக விளக்கப்படுகிறது. இது காட்சிப் புனைவு. ஆனால் தமிழ்க் கவிதைகள் பயணியின் உள்ளக்குறிப்பு தோன்ற புனைந்துரைப்பதால் அஃது உணர்ச்சிப் புனைவு எனப்படும். உணர்ச்சிப்புனைவை, கவிஞனும் வாசகனும் தம் மனத்தால் ஒன்றித்து உணர வேண்டும். இது தன்மையினால் உணர்ச்சி ஒன்றிப்பு பெருஞ்சிறப்புப் பெறுகின்றது. இருவரின் உணர்ச்சிகளும் ஒன்றிணையும்போது

*அவர்கள் கவிதை என்ற வாகனத்தின் மூலம் ஒரே கருத்துத்தளத்தில் பயணிக்கின்றனர். இங்குக் கவிதை கருவியாகின்றது. உணர்ச்சி உயிராகின்றது. வாசகனும் கவிஞனும் ஈருடல் ஒருயிர் ஆகின்றனர்.*

## நிறைவு

*பயணக் கவிதைகளில் நிலவு பயணிக்கு வழித்துணையாகவும் பேச்சுத் துணையாகவும் இணைந்து பயணிக்கிறது. சாலைப் பயணம் மற்றும் மின் தொடர் பயணத்தில் வழியில் காணும் காட்சிகள் பயணியின் மனதில் ஏற்படுத்தும் மகிழ்ச்சியையும் துக்கத்தையும் காட்டுகிறது. அரும்புதல் மற்றும் குறை நிலவு கவிதைகள் பயணி சாலைக் காட்சிகளைக் கூர்ந்து நோக்கும் திறனையும் சமூக அக்கறையையும் வெளிப்படுத்துகின்றன. இக்கவிதைகளில் இரவுப் பயணங்களில் நிலவும் சேர்ந்தே பயணிப்பதால் நிலவிடம் பேசுவதாகவும் அல்லது நிலவைப் பற்றி பேசுவதாகவும் அமைந்துள்ளன. இதனால் இவை வாசகரையும் பயணத்தில் கூடவே அழைத்துச் செல்வதைப் போன்ற ஓர் உணர்ச்சி ஒற்றுமையை ஏற்படுத்துகின்றன. கவிஞரும் வாசகரும் சேர்ந்து பயணிக்கும் போது கவியின்பம் முழுமை அடைகின்றது.*



முனைவர் செ. இராஜேஸ்வரி

# 3. பயணக் கவிதைகளில் பாதை

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணம் பற்றிய கவிதைகளில் பாதை பாடுபொருள் ஆகி இருப்பதை இவ்வியல் விளக்குகிறது. நம் தமிழ் இலக்கியங்களில் பயண இலக்கியங்களும் பகுதிகளும் நிறைய உண்டு. ஆற்றுப்படை இலக்கியங்கள் பயண இலக்கியங்கள் வகையின. அவை புரவலரின் இருப்பிடத்துக்கான பாதையையும் அவ்வழியில் வாழும் ஐந்திணை மக்களின் பண்பாட்டையும் விளக்குகின்றன. அவற்றில் தமிழாக்கமாகவே இங்கும் புராணங்கள் தோன்றின.

'நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்று சொல்லி இராமனோடு புறப்பட்ட சீதை அயோத்தியைக் கடந்ததும் கால் நொந்து 'யாங்குளதோ காடு' என்று இராமனிடம் வினவினாள். 'வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலாத' கண்ணகி கோவலனோடு கரடு முரடான பாதையில் மதுரைக்கு புறப்பட்டாள்.

அவர்கள் பூம்புகாரில் இருந்து மதுரைக்குச் சென்ற அப்பாதையை இளங்கோவடிகள் விளக்கிச் செல்கின்றார்.

வடக்கே தோன்றிய பதினெண் புராணங்கள் சிவன் திருமால் என்ற முதன்மைத் தெய்வங்களின் கோயில்களுக்குச் செல்லும் பாதையையும் அக்கோயில்களின் தலம் மூர்த்தி தீர்த்தம் ஆகிய மூன்றின் சிறப்பையும் விளக்குவன. ஏ சிதம்பரநாதன் செட்டியார் உலகம் சுற்றி வந்து தான் எழுதிய நூலுக்கு உலகம் சுற்றிய தமிழன் என்று பெயர் சூட்டினார். அவரைத் தொடர்ந்து சொக்கலிங்கம் இதய வீணை மணியன் போன்றோர் பயணக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டனர்.

தமிழ்த் தாய் பயணித்து வரும் பயண இலக்கியத் தடத்தில் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகளும் வாசமலர் தூவுகின்றன. அவரது கவிதைகள் உலகப் பயணத்தை மட்டுமல்லாது வாழ்க்கைப் பயணத்தையும் குறிப்பிடுகின்றன. பயணத்துக்கு முதல் தேவை பாதை. அப்பர் சிவாலயங்களுக்குப் பாதை இல்லாத இடங்களில் உழவாரப் பணி மேற்கொண்டு பாதை சமைத்தார். பயணத்தில் பாதைகளின் இயல்பு குறித்து இவ்வியல் விளக்குகின்றது.

***எந்தப் பாதை?***

*ஒரு பயணி தன்னுடைய பயணத்தின்போது சரியான பாதையைத் தெரிவு செய்ய வேண்டும். இது ஆய்வு தொடங்கும் முன்பு ஆய்வின் தலைப்பைத் தெரிவு செய்வதற்கு ஒப்பாகும். பாதை முடிவானால் பயணம் பாதி வெற்றி பெற்று விடும். எந்தப் பாதையைத் தெரிவு செய்வது என்ற குழப்பத்திற்கு சிலர் ஆளாவதுண்டு. அதைப்பற்றி* **முடுக்கம்** *என்ற கவிதை விளக்குகின்றது*

ஒற்றையடிப் பாதையின் நிறைவில்
திரும்பிய
இரு தடங்களில்
எது எனது?

நிற்காமல் நடக்காமல்
கண்டேன்
பெரும் தடம்

*- வறட்சியின் பாடல்கள்*

*ஒரு பயணி தன் பயணத்தில் இரண்டு பாதைகளைக் காணும்போது அவற்றில் பெரிய தடத்தைத் தெரிவு செய்கின்றான். காரணம் பெரும் தடம் வழியாக நிறைய மக்கள் நடந்து சென்று இருப்பர். வாகனங்களும் சென்றிருக்கும். எனவே பெரும் தடம் பாதுகாப்பான பயணத்துக்கு உத்தரவாதம் அளிப்பதால் அத் தடத்தைத் தெரிவு செய்தான் எனக் கருதலாம்.*

ஆங்கிலத்தில் ராபர்ட் ஃ பிராஸ்ட் என்ற கவிஞர் இதே பொருளில் ஒரு கவிதை இயற்றி உள்ளார்.

Two roads diverged in a yellow wood
And sorry I could not travel both
And be one traveller, long I stood
And looked down one, as far as I could
To where it went in the undergrowth.

*- Robert Frost*

இக்கவிதையில் ஒரு பயணிக்கு எந்தத் தடத்தில் போவது என்ற குழப்பம் ஏற்படுகிறது . அவன் இரண்டிலும் போகலாம் என்று முடிவெடுக்கிறான். எப்படி? ஒரு தடத்தில் போய் மறு நாள் திரும்பி வந்து அடுத்த தடத்தில் பயணிக்கலாம் எனறு கருதுகிறான்.

## பாதைக்கான திட்டமிடல்

முத்தமிழ் விரும்பியின் கவிதையில் பாதைக் குழப்பம் கிடையாது ஆனால் பயணம் தொடங்கலாமா என்ற குழப்பம் உண்டு. பயணத்தைத் தொடங்கலாமா என்று நினைக்கும் ஒருவன் 'இன்னும் எட்டப்படவில்லை உடன்பாடு' என்று தயங்குவதாக அமைந்த ஒரு காதல் கவிதை வாழ்க்கை பயணத்துக்கான பார்வைக்கு பாதையைச் சுட்டுகிறது.

**உடன்பாடு**

இன்றாவது
பயணத்தை
மீண்டும் தொடங்கலாமென்றால்

இன்னும் எட்டப்படவில்லை
உடன்பாடு

*- பார்வையில் பூத்த நிலை*

*இக்கவிதையில் ஒருவன் தன் பயணத்தைத் தொடங்க நினைக்கின்றான். ஆனால் அவனுக்குப் பாதை தென்படவில்லை. பாதை தெரியாததால் அவன் தன் பயணத்தை மேற்கொள்ள இயலாமல் தவிக்கின்றான் பயணம் தொடங்குவதற்கு முன்பே பாதையைத் திட்டமிட்டுக் கொள்வது இன்றியமையாதது என்பதை இவனது தயக்கம் காட்டுகிறது.*

*பயணத்தின் போது பாதையைத் திட்டமிடுதல் மிக மிக இன்றியமையாததாகும். இன்னொரு கவிதை திட்டமிட்டபடி தொடங்கிய பயணம் என்ன ஆனது என்பதை விளக்குகிறது.*

**என் வானம்**

திட்டமிட்டபடி
பயணம் கிளம்பி

திரும்பவும்
திரும்பிவிட்டேன்
புறப்பட்ட இடத்துக்கே

உன் நிலத்தில்
நீங்கிப் பறக்கும்
ஒரு பறவை
வெறுமை சூழ்
என் வானம்

*- பார்வையில் பூத்த நிலை*

*இக்கவிதை திட்டமிட்டபடி பயணம் கிளம்பினாலும் பயணத்துக்கான சூழ்நிலைகள் ஆதரவாக இல்லாதபோது பயணி பயணத்தைத் தொடர இயலாமல் மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே திரும்பி வரும் நிலை ஏற்படுகிறது.*

*இரண்டு பறவைகள் இணைந்து தன் வாழ்க்கைப் பாதையில் பறந்து செல்ல திட்டமிடும் போது ஒரு பறவை தனது நிலத்தை விட்டு நீங்கிப் பிரிந்துவிட்டால் மற்றொரு பறவைக்கு அந்த வானம் வெறுமை சூழ்ந்ததாக தோன்றுவது இயற்கை. தன்னுடைய இணைப் பறவை இல்லாமல் அப்பறவை தனியாக வான்வெளி என்னும் வாழ்க்கைப் பாதையில் எப்படி பறந்து செல்லும் என்ற கேள்வியை இக்கவிதை எழுப்புகின்றது.*

### காதல் பயணம்

*பயணத்திற்கான திட்டமிடல் மட்டுமே பயணத்தின் வெற்றிக்கு உறுதி அளிப்பதில்லை. பயணத்தின் போது உடன் வரும் சக பயணியும்*

*பயணத்தின் வெற்றிக்குக் காரணமாக அமைகிறது. ஒரு பயணம் என்பது பாதை, சகபயணி, காலநிலை ஆகிய அனைத்தையும் உட்படுத்தியதாகவே அமைகின்றது. மேற்குறிப்பிட்ட இரண்டு கவிதைகளும் காதல் கவிதைகளாகத் தோன்றினாலும் காதல் இல்லாத சூழ்நிலையிலும் இக்கவிதைகள் பொதுப் பொருளைத் தரவல்லன.*

*கவிஞர் முத்தமிழ் விரும்பி காதல் பயணம் பற்றி நேரடியாகவும் கவிதை படைத்தார். அவரது*

முன்பெல்லாம்
இருவரும் உரையாடிக் கொண்டே
விரிந்த நெடுஞ்சாலையில்

பெரும் தொலைவை
நொடி நேரத்தில்
கடந்ததாய் உணர்ந்திருக்கின்றேன்

*- உன்னோடு உரையாடுதல்*

*என்ற வரிகள் காதலர்களின் நெடுஞ்சாலை நடைப் பயணத்தை வாசகருக்குக் காட்டுகின்றன. ஆனால் இப்பயணத்தில் பயணிகள் இருவரும் காதல் உரையாடல் நிகழ்த்தியபடி செல்கின்றனர். அதனால் அவர்களுக்குப் பாதையின் தொலைவும் பயணத்தின் களைப்பும் தெரியவில்லை. நொடி நேரத்தில் பயணம் முடிந்து விட்டதாக கருதுகின்றார். காதலிக்கும் போது ஏற்பட்ட இவ் அனுபவம் மீண்டும் கிடைக்க வில்லையே என்ற*

ஏக்கம் இக்கவிதையில் தொனிக்கிறது. காதலர்களுக்கு உச்சி வெயில் கூட நிலாப் பொழுதாகத் தோன்றும். இதனால் பல மைல் தொலைவைக் கூட சில அடிகள் போல அவர்களுடைய பேச்சு சுவாரஸ்யத்தில் கடந்துவிட முடியும். காதலிக்கும் போது அவர்களுக்குப் பயணம் என்பது சாலையில் எவ்வித இடர்ப்பாடும் மேடு பள்ளமும் இல்லாத மலர்ப் பாதையாகத் தோன்றுவது இயல்பு. திருமணமானதும் பாதையில் புதைகுழிகள் இருப்பது தெரிய வரும்.

இன்னொருகவிதையில்காதல்பயணத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது பயணப்பெட்டி ஒன்று இடம்பெறுகிறது. காதலின் நினைவுகள் பயணப் பெட்டிக்குள் பத்திரமாக மடித்து வைக்கப்படுகின்றன. ஒவ்வொரு பயணத்தின் போதும் அல்லது ஒவ்வொரு நாளும் தான் தன் மனம் என்னும் பயணப் பெட்டியில் மடித்து வைத்த நினைவென்னும் அப்பொக்கிஷத்தைத் திறந்து பார்த்துக் காதலன் மகிழ்ச்சிப் பரவசம் அடைவதை ‘பருவமழை விந்தை’ என்கிறார் கவிஞர். இங்குப் பருவமழை என்பது வடகிழக்கு பருவமழையையோ தென்மேற்குப் பருவ மழையையோ குறிப்பிடவில்லை இளமைப் பருவத்தின் உணர்ச்சியை மழையெனக் குறிக்கின்றது.

**வானெங்கும் வாசம் வீச**

மலர்ந்த சொற்களையும்
மடித்தெடுத்து
மொட்டாக்கி
வைத்து விடுகிறாள்
பயணப் பெட்டியில்

ஒருநாள் விரியும்
வானவில் கூட
வானெங்கும் வாசம் வீச

சொற்களின் வண்ணங்கள் மலராகும்
பருவமழை விந்தை

- உன்னோடு உரையாடுதல்

*தன் காதலி பேசிய சொற்கள் பேசும்போது மலர்ச்சியாகவும் பேசி முடித்ததும் அவை இதழ் குவிந்து மொட்டாகவும் மாறுகின்றன. அம்மொட்டுகளை மடித்து எடுத்து காதலனின் மனமென்னும் பெட்டியில் வைத்து அவள் நினைவைப் பாதுகாக்கின்றான். மனதுக்குள் பொதிந்துள்ள நினைவுகளோடு அவன் நடக்கும்போது ஒவ்வொருநாளும் வானவில்லின் வர்ணத்தோடு அவள் பேசிய சொற்கள் மீண்டும் மலராக மலர்கின்றன. மலர்களின் வாசம் வானம் எங்கும் வீசுவதாக அவன் உணர்கின்றான். இது*

*பருவத்தில் ஏற்படும் உள்ளக்கிளர்ச்சி என்பதால் பருவம் இன்பத்தை மழை போல் பொழிவதாக அதன் விந்தையைக் கண்டு தான் மகிழ்வதாக காதலன் உரைக்கின்றான்.*

*மொட்டு மலராவது இயற்கை ஆனால் மலர் மொட்டாக் கூம்புவது எங்கும் காணக்கிடைக்காத விந்தை. ஆனால் காதலில் மலர்கள் மொட்டாகி மீண்டும் மொட்டு மலர் ஆகின்றது என்பது பருவத்தில் ஏற்படும் மனக்கற்பனை ஆகும். இக்கற்பனை கவிஞரின் கவித்திறனைக் காட்டுகின்றது. இக்கவிதை கவித்துவமான காதல் கனிரசக் கவிதையாகும். வள்ளுவர்*

மலரினும் மெல்லிது காதல் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்

*என்றார். மலரினும் மெல்லிய காதலை உணர்ந்த சிலரில் கவிஞர் முத்தமிழ் விரும்பியும் ஒருவர் என்பதை அவரது கவிதைகள் மெய்ப்பிக்கின்றன.*

*காதலியோடு இணைந்து நடக்கும் பயணத்தில் மலர் வாசம் வீசும். ஆனால் அவளைப் பிரிந்து செல்லும் பயணத்தின் போது வழியெங்கும் அவள் நினைவுகள் நிறைந்திருக்கும்.*

**திரும்பவும்** *என்ற கவிதை பிரிவுப் பயணத்தைக் காட்டுகிறது.*

விடை பெற்ற பின்பும்
விரல் அசைக்கும் எண்ணங்கள்
பிரியும் வேளையில் எல்லாம்
பிரியாத கண்ணீர்

திரும்பிப் பாராமல் நடப்பேன்
திசைக் கெதிரே
தீக்கொழுந்து முகம்

பேருந்தின் வழியெங்கும்
பேச்சுக் கொடுக்கும் ஞாபகங்கள்

*- பூமர நிழல்*

*காதலியைப் பிரிந்த பின்பு தனிவழியே நடந்து செல்லும் காதலனுக்கு அவன் முகத்துக்கு எதிரே அவளுடைய முகம் தீக்கொழுந்து போல் சிவந்து தோன்றுகின்றது. அவன் பேருந்தில் ஏறிய பிறகும் அவள் பேசிக்கொண்டு வருவதாகவே அவளது குரல் அவன் செவிகளில் கேட்கின்றது. இணைந்து செல்லும்போது நிஜத்திலும் பிரிந்து செல்லும்போது நினைவிலும் காதலியின் சொற்கள் அவன் மனதிலும் செவியிலும் ஒலிப்பதால் காதலிக்கும் போது உண்டாகும் பயணங்கள் பரவசம் நிறைந்தவை.*

## *பாதையில் புதை குழிகள்*

*திருமணத்துக்குப் பின்பு வாழ்க்கைப் பயணம் என்பது கரடுமுரடான பயணமாக இருக்கும். இது*

*இருவேறு பின்புலத்திலிருந்து வந்த நபர்கள் இணைந்து செல்லும் பயணம் என்பதால் அவர்கள் பாதையில் காணப்படும் புதைகுழிகளை அவர்கள் முன்கூட்டியே கண்டறிந்து அவற்றைத் தவிர்த்து கை கோர்த்துப் பயணத்தை நிறைவு செய்ய வேண்டும். புதைகுழிகள் குறித்து* **எதிர்வு** *என்ற கவிதை குறிப்பிடுகின்றது.*

**எதிர்வு**

புரிதலின் ஆழம்
பற்றித் தொடர்ந்தாலும்
கிடைக்கின்றன
கண்ணீர்க் கோடுகள்

நடப்பில்
மங்கலக் குறிகளோடு
தழுவிக்கொண்டாலும்

சில தருணங்களில்
எதிர்கொள்ள வேண்டிய பாதையில்
புதைகுழிகள்

*- வறட்சியின் பாடல்கள்*

*காதல் நிறைவேறி மங்கலக் குறிகள் தாங்கித் தழுவிக்கொண்டு பயணிக்கும் போதும் வாழ்க்கைப் பாதையில் எதிர்ப்படும் புதைகுழிகளைக் கண்டு ஒதுங்கிச் செல்ல வேண்டும். அப்போது வாழ்க்கைப் பயணம்*

அமைதியாய்த் தொடரும் என்ற படிப்பினையை ஊட்டும் கவிதை இது.

கவிஞர் தற்காலத்தில் மகிழுந்தில் தேசிய நெடுஞ்சாலைகளிலும் தங்க நாற்கரச் சாலைகளிலும் அதிகம் பயணிப்பவர் என்பதால் சாலைகளில் மேற்கொள்ளும் பயணம் பல கவிதைகளின் பாடுபொருள் ஆயிற்று. கோரோனோ பெருந்தொற்றுக் காலம் முடிந்ததும் கனரக வாகனங்களின் சரக்குப் பயணங்கள் தொடங்குகின்றன. அப்போது தஞ்சை மாவட்டத்தில் இருந்து அரிசி மூட்டைகள் பிற மாவட்டங்களுக்குப் பொது வழங்கல் துறைக்கு கொண்டு செல்லப்படுகின்றன. கனரக வாகனங்கள் அரிசி மூட்டைகளை ஏற்றிச் செல்கின்றன. ஆனால் நெல் விவசாயம் செய்தவன் தன் வீட்டில் குருணை கஞ்சி குடிக்கின்றான். இம் முரண் நிலையை **நொய்யரிசிக் கஞ்சி** என்ற கவிதை சுட்டுகின்றது.

தங்க நாற்கரச் சாலையில்
தேங்கிக் கிடக்கின்றன
வாகனங்கள்

எனத் தொடங்கும் கவிதை

சில மாதங்களின்
தேக்கத்தைக் குவியலாக்கி
விரைகின்றன
பல்சக்கர வாகனங்கள்

வாழ்வாதாரம் தேடும்
விலையில்லா நெல்மணிகள்
அரைக்கப்படுகின்றன

அவித்துக் குவித்து
உலை காய்கிறது
நொய்யரிசிக் கஞ்சி

*- நுண்கலை மருத்துவன் - விடுபட்ட சில குறிப்புகள்*

*இக்கவிதையில் விவசாயம் செய்யாத பொதுமக்களுக்கு விலையில்லா அரிசியை வழங்குவதற்காக நெல்மணிகளை அரைத்து அரிசி எடுக்கின்றனர். இந்த அரிசி மூட்டைகளை ஏற்றிச் செல்லும் பல் சக்கர வாகனங்களின் எண்ணிக்கையால் தங்க நாற்கரச் சாலையில் போக்குவரத்து நெருக்கடி ஏற்படுகின்றது. வாகனங்கள் தேங்கி நிற்கின்றன. இக்கவிதை பயணம் பற்றிய கவிதையாக இருந்தாலும் வயலில் பாடுபட்டவனுக்கு முழு அரிசிச் சோறு கிடைக்கவில்லை என்ற சமூக அவலத்தை ஏழை படும் பாடுகளின் எதார்த்தத்தைத் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றது.*

## நெடுஞ்சாலையின் குறுக்கே

*தேசிய நெடுஞ்சாலைகள் என்பன விரைவாகச் செல்லும் வண்டிகளுக்காக உருவாக்கப்பட்டவை. இச்சாலைகளில் விரைந்து செல்லும் வாகனங்களுக்குக் குறுக்கே சில உயர் ரக*

குதிரைகள் மிக மெதுவாக சாலையைக் கடக்கும் காட்சி வினோதமானதும் நடப்பியலுக்கு முரண்பட்டதும் ஆகும். சாலையின் உருவாக்க நோக்கத்திற்கும் வாகனங்களின் விரைவுப் பயணத்திற்கும் பொருந்தாத ஒரு காட்சி. **பெருநகரம்** என்ற கவிதையில் தேசிய நெடுஞ்சாலையில் இரு புறங்களிலும் திமிறிக்கொண்டு வரும் வாகனங்களை நிறுத்தி உயர் ரகக் குதிரைகள் சாலையை மெல்ல கடக்கின்றன. அவற்றின் வெட்டப்பட்ட வால் மயிர் மற்றும் பிடரி மயிர் அவை பணக்காரக் குதிரைகள் என்பதைச் சுட்டுகின்றன. இக்கவிதையில் வரும் குதிரைகளை குதிரைகளாக விலங்குகளாகப் பொருள் கொள்ள வேண்டியதில்லை. நவ நாகரீக மங்கையராகவோ பணக்காரத் திமிர் பிடித்த இளைஞர்களாகவோ இருக்கலாம். விரைந்து செல்லும் நெடுஞ்சாலையில் இவர்கள் இருபுறங்களில் இருந்து வரும் வாகனங்களையும் நிறுத்தி சாலையின் குறுக்கே கடந்து செல்லலாம். நெடுஞ்சாலைகளில் குறுக்கே கடந்து செல்லும் பாதை கிடையாது. சாலைகளில் வேகத்தடைகள் கிடையாது. ஏனென்றால் நெடுஞ்சாலையில் செல்லும் வாகனங்கள் பல்குதிரை திறனோடு திமிறிச் செல்லும்.

கவிஞர் பொறியாளர் என்பதனால் அவருடைய படைப்புகளில் குதிரைத்திறன் (Horse

Power) என்ற சொல்லைத் திரும்பத் திரும்ப பயன்படுத்துகிறார். குதிரைகளும் மேட்டிமைத் தனத்தைக் குறிக்கும் வகையில் அவரது கவிதைகளில் இடம்பெறும். ஆக இங்குக் குதிரைகள் என்பன விலங்குகளைக் குறிக்காமல் குதிரை போல மேட்டிமைத்தனத்துடன் அத்துமீறி குறுக்கே செல்லும் ஆட்களும் இருக்கின்றனர் என்பதைக் குறிக்கின்றது. பாதையும் பயணமும் நிர்ணயிக்கப்பட்ட தாக இருந்தாலும் கூட இன்னார் மட்டுமே இப்பாதையில் செல்ல வேண்டும் என்ற விதிகளையும் உடைக்கின்ற, அத்து மீறுகின்ற, திமிரிச் செல்கின்றவர்களும் அப்பாதையில் பயணிக்க கூடும் அவர்களையும் ஒரு பயணி பொறுமையுடன் எதிர்கொள்ள வேண்டும்.

மனிதன் ஒரு சமூக விலங்கு என்பது சமூகவியலின் கருத்து அவனைச் சமுதாயம் சில கட்டுப்பாடுகளும் விதிகளும் கொண்டு பண்படுத்தி இருக்கின்றது. சமூக விதிகளுக்குக் கட்டுப்படாதவன் காட்டு விலங்குக்குச் சமமாவான். இதனை உணர்த்தும் பொருட்டு வெட்டப்பட்ட வால் பிடரி மயிர் கொண்ட உயர் குதிரைகள் என்ற வரிகள் காணப்படுகின்றன. கொஞ்சம் கூட அச்சமின்றி மெல்ல நடக்கின்றன. அவற்றுக்கு சமூக விதிகளுக்கும் சாலை விதிகளும் கட்டுப்பட வேண்டும் என்ற என்ற மனநிலை சிறு வயது முதல் உருவாக்கப்படவில்லை. ஆகவே அவை

தன்னிச்சையாக நடந்து செல்கின்றன. நீண்ட பயணங்களுக்காக தடையற்றுச் செல்லவேண்டிய வாகனங்களின் போக்குவரத்தை நிறுத்தி மேட்டிமை பிடித்தவர்கள் உருவாக்கும் இடர்ப்பாடுகளும் பயணங்களில் உண்டு

**பயணம் போக ஆசைப்படு**

பாதையில் ஏற்படும் இடர்ப்பாடுகளைக் களைந்து முன்னேற வேண்டுமே தவிர பயணத்தை நிறுத்தி விடக்கூடாது. பயணம் தொடர்ந்து கொண்டே இருக்க வேண்டும். அதுவே பயணத்தின் மகத்துவம் ஆகும். ஏனென்றால் ஒரே இடத்தில் இருப்பதற்கு மனிதர்கள் ஒன்றும் தாவரங்கள் அல்லர்; தரையில் வேரூன்றிய மரங்கள் அல்லர். இவ்வுலகம் பரந்தது மனிதர்கள் பரந்துபட்ட உலகில் பயணங்களைமேற்கொண்டு பல்வேறுபட்ட மனிதர்களின் பழக்கவழக்கங்களையும் பண்பாடுகளையும் அறிந்து கொள்ளுதல் அவர்களின் அறிவையும் மனதையும் விசாலாமாக்கும். அவ்வாறின்றி தங்கள் ஊருக்குள் தங்களது மாநிலத்துக்குள் பயணிப்பவராக இருந்தாலும் தெருவுக்குள் பயணிப்பதும் நெடுஞ்சாலையில் பயணிப்பதும் தங்க நாற்கரச் சாலையில் பயணிப்பதும் என பயணம் எதுவாக இருந்தாலும் அவர்கள் பயணத்தைத் தொடர வேண்டும். இடையில் நிறுத்த கூடாது. ஆங்கிலக் கவிஞர்களும் இக்கருத்தைச் சுட்டுகின்றனர்.

You are not a tree
You are not bound to the ground
You walk on
You have wings and dreams
And the heart full of wonder
So pick up your feet and go
Spread  kindness like a wild flower wherever you go
Fall in love with the life you live
And always leave people
better than you found them

*- Drewniverses from Tumblr*

*இக்கவிதை "சாலையெங்கும் நீ நடந்து செல்லும்போது காட்டுப் புஷ்பங்களை போல கருணையைப் பரப்பு, நீ வாழும் வாழ்க்கையை நேசி, நல்ல மனிதர்களைத் தொடர்ந்து சந்தித்தபடி செல், நீ ஒன்றும் மரமல்ல, நின்ற இடத்தில் நிற்பதற்கு, உனக்குக் கனவுகளும் சிறகுகளும் உண்டு. உன் இதயம் முழுக்க அதிசயம் நிரம்பி இருக்கிறது. எனவே எழுந்து நட!" என்கிறது. இக்கவிதை மனிதன் தன் பயணத்தை மேற்கொள்ள வேண்டும் என்று தூண்டுகின்றது.*

## இரயில் பயணத்துக்கான நடைப் பயணம்

*ஒரு பயணி ஊருக்குள் தான் நடந்து செல்லும் போது தான் கண்ட காட்சிகளை ஒரு மாலைக் காட்சி என்ற பெயரில் என்ற*

*தலைப்பிட்டு நிகழ்ச்சிகளை வரிசையாக எடுத்துக் கூறுகின்றான். அவன் தன் அலுவல் முடிந்து தொடர்வண்டி நிலையத்திற்குப் போகும் பாதையில் நடைப் பயணத்தின் போது காணும் காட்சிகள் கீழே பட்டியலிடப்பட்டு உள்ளன.*

கூடு திறந்ததும்
மறுகூட்டை நோக்கி
பூச்சுக் கலையாத முகங்கள்

உதிரிப்பூ விளையாடல்
படியாத பேரம்
எட்ட எட்ட நடைபோடும்

குறுக்குச் சந்தில்
அழும் குழவிக்கு
பகல் நிலா காட்டி
அசைந்து வரும் பசுதொட்டு
கண்ணில் கன்னம் ஒற்றும் காட்சி
வெள்ளிக்கிழமையொன்றில்

பொது வழி அல்ல
பலகை மாட்டியிருக்கும் சந்தில்
காலடி பட்ட கோலமிருக்க
கிளைச்சாலை உட்புகுந்து
விரைய
மொட்டைமாடியில்

பனியனொன்று தென்றல் தேடும்

சாலையோர சன்னிதியை
கும்பிட்டும் கும்பிடாமல்
குவியும் கரங்கள்
புறநகர் புகைவண்டி நோக்கி
விரையும் கால்கள்

வழியில் மறித்த நண்பருக்கு
நேரமாச்சு என விடை கொடுத்து
ஓட
விடை பெற்றிருக்கும் வண்டி

அடுத்து எப்போது

அரச மர இலைகள்
அசைக்கும் காற்றோடு
கலக்கும் பெருமூச்சு

*- பூமர நிழல்*

*பயணியின் வேகப் பயணம் பயனற்றுப் போனது. அவனால் அவன் நினைத்தபடி புகை வண்டியைப் பிடிக்க இயலவில்லை. வண்டி போய்விட்டது. இனி அடுத்த வண்டிக்குக் காத்திருக்க வேண்டும். வழியெங்கும் அவன் விரைவாகக் கண்டு ரசித்து வந்தகாட்சிகள். இக்கவிதையில்காணப்படுகின்றன.*

*இக்கவிதையில் இரயில் பயணத்திற்கான நடைபயணம் பாடுபொருள் ஆகியுள்ளது. நடைப்*

*பயணத்தின் பாதையில் காணப்படும் காட்சிகள் கவிதையில் காணப்படுகின்றன. அத்தனைக் காட்சிகளையும் கண்டு ரசித்தபடி விரைந்து சென்றும் இரயில் பயணம் கிட்டவில்லை. நடைப்பயணத்தின் பாதையும் இரயில் பயணத்திற்கான வேகமும் இக்கவிதைக்குப் புது உற்சாகத்தை அளிக்கிறது.*

*இவ்வாறாக பயணத்திற்கான பாதை, பாதையின் வகைகள், காட்சிகள், பாதையின் தன்மை, பாதையைத் திட்டமிடுதல் போன்றவை பயணக் கவிதையின் முக்கியப் பாடுபொருள் ஆகியிருப்பது வாசகருக்குச் சிறந்த கவிதை அனுபவத்தையும் கருத்தையும் வழங்குகின்றது.*



# 4. இரயில் பயணக் கவிதைகள்

*வாழ்க்கை என்பது இரயில் பயணத்தைப் போன்றது என்பர். இறுதிவரை உடன் பயணிப்பவர் சிலர் மட்டுமே. வேறு சிலர் பாதி வழியில் ஏறி பாதி வழியில் இறங்கி விடுவர். முத்தமிழ் விரும்பி இரயில் பயணத்தைப் பற்றி சில கவிதைகளை இயற்றியுள்ளார். இவர் இரயிலை தொடர்வண்டி என்று தன் கவிதைகளில் குறிப்பிட்டுள்ளார். அவற்றில் உடன் பயணித்த பயணிகளைக் கூர்ந்து நோக்கி அவர்களை பாடுபொருள் ஆக்கினார். இரயிலை இரும்புக் குதிரை என்று ஓர் ஆங்கிலக் கவிஞர் குறிப்பிட்டார்,*

**The Iron Horse**

The iron horse is coming sure
Our plodding days will soon be over
The engineer has gone before
To mark the way and make it sure

*இக்கவிதை விரைவாக வரும் தொடர்வண்டியை இரும்புக் குதிரை என்கிறது. முத்தமிழ் விரும்பியின் பார்வையில் பூத்த நிலா என்ற கவிதைத் தொகுதியில் இரயில் பயணத்தில் ஒரு அழகான கற்பனை இடம்பெற்றுள்ளது. இரண்டு வெவ்வேறு காட்சிகளை ஒன்றாக இணைத்துக் காட்டுவதில் கவிஞரின் கற்பனைத் திறம் புலப்படுகிறது.*

**அருவிக்கண்ணாடி**

ஓடும் தொடர்வண்டியின்
கதவருகே தன்முகம் பார்க்கிறாள்
அச்சிறுமி

அருவிக் கண்ணாடியில்
ஆடை திருத்தி கொள்கிறது

மலைமுகட்டைத் தழுவிய
மேகப்பொதியொன்று

*- பார்வையில் பூத்த நிலா*

*மலைமுகட்டில் தழுவிச் செல்லும் மேகங்கள் தன் பாதையில் பயணிக்கின்றன. மேகத்தின் உருவங்கள் மாறுகின்றன. இது ஓர் இயற்கை நிகழ்வு. ஆனால் அந்த மேகக் கூட்டம் அருவி என்னும் முகக் கண்ணாடியில் தன் அழகைப் பார்த்து ஆடை திருத்தி கொள்கிறது என்பது கவிஞரின் கற்பனையாகும். கற்பனைக்கு*

மூலகாரணமாக இருப்பது ஒரு சிறுமி கதவருகே நின்று அங்கு உள்ள முகக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கும் காட்சி. இந்நிகழ்வு இரயில் வண்டியில் பயணம் செய்யும் பல லட்சம் பேர் பார்த்த, இனியும் பார்க்க போகின்ற ஒரு நிகழ்வுதான் என்றாலும் அச்சிறுமியை மேகமாகவும் கண்ணாடியை அருவியாகவும் கற்பனை செய்வது புதுமையானதாகும். இவ் இரண்டு நிகழ்வுகளும் கவிதைக்கு அழகூட்டுகின்றன. இரயில் ஜன்னல் வழியாக வெளியே பார்க்கும் போது அருவி கொட்டுவதைக் காணலாம். அம் மலையின் முகட்டில் மேகங்கள் நகர்வதைப் பார்க்கலாம். இன்னொருபுறம் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கும் ஒரு சிறுமியை ரசிக்கலாம். இவ்விரண்டு காட்சிகளையும் ஒன்றிணைத்து கவி நயம் மிக்க ஒரு கவிதையாக வடிவமைப்பது கவிஞரின் தனித்திறன் ஆகும்.

பலர் இரயிலில் பயணம் செய்கின்றனர். எதிரெதிரே அமர்ந்து இருக்கின்றனர். இரவு வந்து விட்டது. இனி உறங்க வேண்டும். இந் நிலையில் ஒரு பயணி மற்றவர்களைக் கவனிக்கிறார். ஒவ்வொருவரும் என்னென்ன செய்கிறார்கள் என்பதைப் பட்டியல் இடுவது போல கவிதை அமைந்துள்ளது.

## சில அத்தியாயங்கள்

அசைந்து கொண்டிருக்கும்
தொடர்வண்டி

புத்தகத்தை திறந்தபடி
படிக்காமலிருக்கிறார் அவர்
இவரும்
மூடிய புத்தகத்தை மடியிருத்தித்
தட்டியபடி படித்துக் கொண்டிருக்கிறார்
முகங்களின் வரிகளை

கோரினால் கொடுப்பாரா
என்ற யோசனையோடு ஒருவர்

அடுத்த பிரிவிலிருந்து நீளுகிறது
ஒருகை

யாரோ ஒருவர் படுக்கை விரித்ததும்
எல்லோரும் நீட்டுகிறார்கள்
உடல்களைத் தளர்த்தி

நீல விளக்கொளியில் தடதடத்து
விசிறிக் காற்றில் பறக்கின்றன
இரவைப் பயிலும் பக்கங்கள்

மாத்திரைகள் விழுங்கி
இரவை உள்வாங்கும்
மினரல் தண்ணீர்ச் சுவையோடு
ஒரு பயணம்

*- வறட்சியின் பாடல்கள்*

இரயிலில் உட்கார்ந்து புத்தகங்களை விரித்து வைத்துக் கொண்டிருக்கும் இருவரில் ஒருவர் புத்தகத்தைத் திறந்து வைத்தபடி படிக்காமல் இருக்கிறார். இன்னொருவர் புத்தகத்தை மூடி மடியில் வைத்து விட்டுப் படிக்கிறார். அவர் அங்கிருக்கும் மனிதர்களின் முகங்களை முகக் குறிப்பை அறிந்து கொள்ள முயல்கிறார். இவர் முகத்தின் வரிகளைப் படிக்கின்றார். மற்றொருவர் அதுவும் கூட படிக்காமல் இருக்கின்றார். அவர் மனிதர்களையும் படிக்கவில்லை. புத்தகத்தை படிக்கவில்லை.

அடுத்தவரிடம் கேட்டால் தருவார்களா மாட்டார்களா என்ற ஒரு ஐயத்துடன் எதையோ கேட்கமனதில்எண்ணியபடிஅமர்ந்திருக்கின்றார். அடுத்த பிரிவில் இருந்து ஒருவர் கையை நீட்டி எதையோ வாங்கிக் கொள்கிறார்.

இரவாகி விட்டதால் உறங்கும் நேரம் வந்துவிட்டது. எனவே ஒருவர் படுக்கையை விரித்துப் படுத்ததும் மற்றவர்களும் இனி விளக்கை அணைத்துவிட்டுத். படுக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இனி புத்தகம் வாசிக்கவோ வேடிக்கை பார்க்கவோ முடியாது என்ற எண்ணத்தில் அவரவர் தத்தம் படுக்கையில் உடலை நீட்டி நிமிர்த்திப் படுக்கின்றனர். இப்போது குழல் விளக்கு அணைந்து நீல ஒளி

பரவியது. காற்று வீசுகின்றது, இரயில் பறக்கின்றது, இனியும் ஒரு படிப்பு நடக்கின்றது. அது இரவைப் படிக்கும் படிப்பு. 'இரவைப் பயிலும் பக்கங்கள்' என்கிறார் கவிஞர். இரவினைக் கூர்ந்து கவனித்தபடி அதன் அமைதியையும் இருளையும் உள்வாங்கி ரசிக்கும் தன்மையை கவிஞர் படிப்பு என்கிறார். வாடிக்கையாக எடுத்துக்கொள்ளும் மாத்திரைகளை உட்கொண்ட பிறகு மினரல் வாட்டர் குடித்ததும் அதன் சுவை நாக்கில் இருக்க இரவுப்பயணம் நீடிக்கின்றது. இப் பயணக் கவிதையில் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளவில்லை. ஒருவர் மற்றவர்களைக் கவனிக்கிறார் அவரவர் தத்தம் படுக்கையை விரித்துப் படுத்து உறங்குகின்றனர்.

## குழந்தைகளோடு பயணம்

சிறுவர்களோடு செய்யும் பயணம் பெரியவர்களோடு செய்த பயணத்துக்கு நேர்மாறாக அமைகிறது. குழந்தைகளோடு பயணம் செய்வதன் மகிழ்ச்சியை ஒரு கவிதை விளக்குகிறது. இது ஒரு பயணி இன்னொரு பயணியின் குழந்தைகளோடு பேசி விளையாடுவதாக அமைந்துள்ளது.

**புகைவண்டியில் நீளும் பயணத்தில்** என்பது இக்கவிதையின் தலைப்பாகும்

தூங்கிய குழந்தைகள்
எழுந்து உணவு உட்கொள்கின்றன

அழுத குழந்தையொன்று
தூக்க மயத்தின் தழுவலில்
பிஞ்சு விரல் அசைகிறது.

மதியப் புழுக்கம்
கலைந்து
நல்ல பிரதியின் ஊடுருவலால்
கோடை மாலைக்காற்று
மயக்குகிறது

சேலத்தில் படிக்கிறாயா
தம்பி படிக்கவில்லை

நீ குறும்பா? தம்பியா?
மௌனம்

சொல் சுவேதா

கைக்குட்டையை மடித்து
துப்பாக்கியாக்கித் தம்பியைச்
சுட்ட ஸ்வேதா அவரிடம்

சொன்னாள்
'நீதான் குறும்பு'

*- பூ மர நிழல்*

*இக்கவிதையில் இரயிலில் பயணம் செய்யும் குழந்தைகளைக் காண்கின்றோம். அவர்களுக்கு*

முன் இருக்கையில் இருக்கும் பெரியவர்களும் குழந்தைகளும் புதியவர்கள். ஏற்கெனவே தூங்கிய குழந்தைகள் இப்போது உணவு உண்கின்றன தூங்கிக்கொண்டிருக்கும் ஒரு குழந்தை தூக்க மயக்கத்தில் தன் பிஞ்சு விரலை அசைத்து உறங்கிக் கொண்டிருக்கிறது. மதிய வேளையின் புழுக்கம் குறைந்து கோடை காலத்தின் மாலைக் காற்று மெல்ல வீசுகின்றது. ஸ்வேதாவும் அவள் தம்பியும் எதிரே அமர்ந்து இருக்கின்றனர். ஸ்வேதா கைக்குட்டையைத் துப்பாக்கி போல மடித்துத் தம்பியைச் சுட்டு விளையாடுகிறாள்.

ஸ்வேதாவின் முன்னால் அமர்ந்திருக்கும் பயணி ஒருவர் 'நீ எங்கே படிக்கிறாய்?' 'சேலத்தில் படிக்கிறாயா?' என்று கேள்வி கேட்கிறார் ஒருவர் அதற்கு அவர் 'ஆம்' என்று பதில் சொல்லி இருக்க வேண்டும். அந்தப் பதில் கவிதையில் இடம்பெறவில்லை. 'தம்பி எங்கே பிடிக்கிறான்?' என்று கேட்ட கேள்விக்கு அவள் 'தம்பி படிக்கவில்லை' என்று சொன்ன பதில் மட்டும் இக்கவிதையில் இடம் பெற்றுள்ளது. மூன்றாவது கேள்வி, 'நீ குறும்பா? அல்லது உன் தம்பி குறும்பா?' இவ்வாறு அவர் கேட்டபோது அதற்கு மௌனமே பதிலாய் ஆயிற்று. சிறிது நேரம் கழித்து அந்தக் குறும்புப் பெண் ஸ்வேதா கேள்வி கேட்ட நபரைப் பார்த்து 'நீதான் குறும்பு' என்று பதிலடி கொடுத்தாள்.

*முதல் கவிதையில் பெரியவர்கள் பயணிக்கின்றனர். அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாமல்அமைதியாகஇருக்கின்றனர். இக் கவிதையில் குழந்தைகளைக் காண்கிறோம். ஒரு குழந்தை பெரியவர்கள் கேட்கும் கேள்விக்கு சூடாகவும் சுவையாகவும் பதில் அளிக்கின்றது. இன்னொரு கவிதையில் கண்ணாடியைப் பார்த்து ரசித்த சிறுமி புதிய கற்பனை விதையைத் தூவுன்றாள். குழந்தைகளே கவிதைகள் தாம். குழந்தைகள் இருக்கும் இடம் கவிச்சோலை; கவித்துவம் நிரம்பிய இடம்.*

*எமிலி டிக்கின்சன்* (Emily Dickinson) *என்ற கவிஞர்* Train *என்ற தலைப்பில் எழுதிய கவிதை, ஆர்.எல். ஸ்டேவென்சன்* (R L Stevenson), *எழுதிய* From a railway carriage *என்ற கவிதை ஆடன்* (W. H. Auden) *எழுதிய* The night mail, *ஜூடித் ரைட்.* (Judith Wright) *என்ற பெண் கவிஞர் எழுதிய* Train journey (Flame Tree in a Quarry) *ஆகியவை புகழ் பெற்ற இரயில் கவிதைகள் ஆகும். இரயில் பயணம் பற்றி ஆர்.எல். ஸ்டேவென்சன் எழுதிய கவிதையில் இரயில் வேகமாக விரைந்து செல்லும் போது ஜன்னல் வழியாகத் தெரியும் காட்சிகளை*

Faster than fairies, faster than witches
Bridges and houses, hedges and ditches
And charging along like troops in a battle

All through the meadows, the horses and cattle
All of the sights of the hill and the plain.
Fly as thick as driving rain

*என்று புனைந்துரைக்கிறார்.*

## இரயிலடி உவமை

*சில அத்தியாயங்கள் கவிதை இரயில் காட்சிகளோடு நின்றுவிடவில்லை. தொடர்கிறது. குமரிக்கண்டத்தில் பிறந்த மனிதனின் பிரச்சினைகளோடு கூடிய பயணம் பிறர் அறியாத மறைபொருள் சித்திரங்களாக இருப்புப் பாதை எங்கும் நீண்டு கிடக்கின்றன என்று நிறைவு பெறுகிறது. இப்பகுதியில் இரயில் பயணத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை என்றாலும் இரயில் பயணத்தை ஆதிகால மனிதகுல வரலாற்றுக்கு உவமையாகக் குறிக்கிறது. இரயிலில் செல்பவர்கள் மாறலாம், இரயில் மாறலாம், ஆனால் இருப்புப் பாதைகள் மாற்றப்படுவதில்லை. அவை இருந்த இடத்திலேயே இருக்கும் அது போல மனித குல வரலாற்றில் மனிதர்கள் மறைந்து விட்டாலும் அவருடைய பிரச்சினைகள் மாறிக் கொண்டே வந்தாலும் அவர்களின் ஆழ்மனதில் வரலாற்றுத் தடங்கள் இருப்புப் பாதை போலப் பதிந்து இருக்கும் என்கிறார்.*

நாஞ்சில் நாடனில்
குமரி நிலப் பெருங்கதை
மனிதனாய் பிரச்சினைகளோடு
பயணம் போனாலும்

இருப்புப் பாதையெங்கும் நீளும்
வேரடிச் சித்திரங்கள்

*- வறட்சியின் பாடல்கள்*

*வெளியே தெரியாமல் உள்ளே ஆழமாக வேர் விட்டிருக்கும் ஆழ்மனத்தின் நினைவுகளை 'வேரடிச் சித்திரம்' என்று கவிஞர் உவமித்தது சிறப்பும் அழகும் நிரம்பியது. மனிதகுல வரலாற்றை இருப்புப்பாதைக்கும் அவனது வரலாற்றை இரயில் பயணத்துக்கும் ஒப்பிட்டது புதுமையும் அழகும் ஒருங்கே மிளிர்வதாகும்.*

*கவிஞர் தன்னை அறிமுகம் செய்து கொள்ளும் கவிதையாக* **நீ ஆடும் களம்** *என்ற கவிதை அமைந்துள்ளது.*

நான் ஒரு வழிப்போக்கன்
எனது பயண நேரம் என்னுடையது
.
.
.

நீயாடும் களம்
நானல்லேன்

*- தேனடையம் வரலாறு*

என்ற கவிதையில் தன்னை ஒரு பயணியாக அறிமுகம் செய்கின்றார். தன்னுடைய பயணத்தின்போது தான் பல மனிதர்களை சந்திக்க நேரிடும், எந்த மனிதரோடும் தான் தன் பயணத்தை நிறுத்தப் போவதில்லை என்று இக்கவிதை குறிப்பிடுகின்றது பயண நேரம் தன்னுடையது என்பதனால் பயணத்தை விரைவுபடுத்துவதும் நிறுத்தி வைப்பதும் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் அமைந்தது என்பதும் பிறருடைய ஆசைக்கும் எண்ணத்திற்கும் அதில் இடமில்லை, பிறர் எவராலும் தன்னுடைய பயணத்தை விரைவுபடுத்தவோ தாமதப்படுத்தவோ இயலாது என்கிறார்.

'நின்று பேச நேரமில்லை
நீண்ட தூரப்பயணம் இது'

என்ற கவிதை வரிகளுக்கு இணைய தனது கருத்தை இக்கவிதையின் வெளிப்படுத்தி உள்ளார். தான் யார் என்பதை இக்கவிதையின் மூலம் எடுத்துக் காட்டுகின்றார்.

## பாலத்தில் போகும் இரயில்

இந்தியாவில் பல இரயில்கள் ஆற்றுப் பாலத்தின் மீது ஓடுகின்றன. பெரும்பாலும் அவை தடதடவென்று மகிழ்ச்சியாகத் தான் ஓடும். சில வேளைகளில் விபத்துகள் நடக்கும். தீ வைப்புகளும் நடக்கும். கவிஞர் மகிழ்ச்சி

*அவலம் என்ற இரண்டையும் பதிவு செய்கிறார். வரலாற்று நிகழ்வுகள் கவிதை வடிவில் ஆவணமாகுகின்றன. இவ்இரண்டுக்கும் முத்தமிழ் விரும்பியின் கவிதை தொகுதிகளில் சான்றுகள் உண்டு.*

*இரயில் பாலத்தின் மீது போகும் போது பாலத்தின் மீது நிற்கும் சிறுவர்கள் இரயிலில் செல்பவர்களைப் பார்த்துக் கையசைத்து மகிழ்ச்சியாக விடை கொடுப்பது வழக்கம். தெரு விளக்குகள் பாலத்திற்கு கீழே ஓடும் ஆற்றில் பிரதிபலிப்பதைக் கவிஞர் சரவிளக்கு என்கிறார்*

**நீர்ச் சரம்**

நீரில் மிதக்கும்
அகல் விளக்குகள் என
காவிரி நீரில்
தெரு மின்விளக்குகள்

கரம் அசைத்து
சடுகுடு சிறுவர்களின் பாலத்தை

வேகமாய்க் கடக்கிறது
மின் தொடர் வண்டி

*- பார்வையில் பூத்த நிலா*

*இங்கும் குழந்தைகள் இடம்பெறுகின்றன. ஆனால் இரயிலுக்குள் அல்ல. இரயிலுக்கு*

வெளியே. புதிய முகங்களை காணும் மகிழ்ச்சியில் இவர்கள் தாம் வெளியே நின்றபடி இரயிலுக்குள் இருப்பவர்களுக்குக் கையசைத்து விடை கொடுத்து தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்றனர். இது குழந்தைகளின் குதூகலம் பற்றிய அழகான கவிதை.

இரயில் பாலத்திற்கு கீழே காதலர்களின் உரையாடலை ஓர் ஆங்கிலக் கவிதை அழகாக எடுத்துக்காட்டுகின்றது.

As I walked Out one Evening

.

.

.

‘Love has no ending.

“I’ll love you, dear, I’ll love you

Till China and Africa meet

## எரிந்து புகையும் இரயில்

பெரியவர்கள், குழந்தைகள், மகிழ்ச்சியோடும் தூக்கத்தோடும் பேசிக்கொண்டேயும் பயணிக்கும் இரயில் பயணங்களைப் பாடிய கவிஞர் உயிரோடு பயணிகள் கொளுத்தப்பட்டு எரிந்து உருக் குலைந்ததையும் கவிதை ஆக்கினார்.

**சரயு.. சரயு..**

ஆள் அரவமற்றுத்
தனித்துக் கிடக்கிறது
சரயு நதிப் பாலம்

சபர்மதித் தொடர்வண்டியின்
பெட்டிகள் கொடுந்தீயால்
உராய்கின்றன.

இப்படியெரு
இருபத்தியோராம் நூற்றாண்டு
இமயத்தின் பக்கத்தில்

ஓங்காரமாய்ச் சிரிப்பது
ஏக இறைவன்.

- தேனடையும் வரலாறு

*சரயு நதி பாலம் மீது பயணித்த சபர்மதி விரைவு இரயிலில் மதவெறியர்கள் அதில் பயணித்த பயணிகள் மீது பெட்ரோல் ஊற்றிக் கொளுத்திக் கொன்றனர். இக்கவிதை ஒரு வரலாற்று ஆவணப் பதிவாகும்.*

***நிறைவு***

*இவ்வாறு இரயில் பயணங்களின் பல்வேறு பரிமாணங்களை முத்தமிழ் விரும்பி கவிதையாகப் பதிவு செய்துள்ளார். இக்கவிதைகள்*

சுவையான வேறுபட்ட இரயில் பயண அனுபவங்களை கவிப்பொருளாக்கி வாசகருக்குச் சிறந்த கவிதானுபவத்தை வழங்கி மகிழ்விக்கின்றன. சிந்திக்கத் தூண்டுகின்றன திரும்பத் திரும்ப வாசிக்கும் ஆர்வத்தை ஊட்டுகின்றன.



# நெடுஞ்சாலை பற்றிய உரைநடைப் பதிவுகள் (முகநூல்)
## கவிஞர் முத்தமிழ் விரும்பி

## 1. தங்க நாற்கரச்சாலை

*2012 டிசம்பர் மாதம் முதல், அந்த சாலையோரக் சாப்பாட்டுக் கடையில் வாய்ப்புக் கிடைத்தால் மதிய உணவு நேரத்தில் தவறாமல் சாப்பிட்டு வருகிறோம்.*

*தேசிய நெடுஞ்சாலையில் உள்ள ஒரு தனியார் பொறியியல் கல்லூரி வாசலின் இடது புறம் இருக்கிறது அந்த உணவு விடுதி.*

*எட்டாண்டுகளுக்கு முன்பு பசி நேரம். மதிய உணவு நேரம். மகிழுந்தை ஓட்டுநர் நிறுத்த அக்கடையில் சூடான சுவையான உணவு. ரசம் மிக நன்றாக இருக்கும். கேட்டால் நம் கண்ணெதிரே ஆம்லெட் போட்டு, மீன் பொறித்துக் கொடுப்பர்.*

*தேசிய நெடுஞ்சாலையில் செல்லும் வெளி மாநில சரக்குந்து கன ரக வாகன ஓட்டிகள் விரும்பிச் சாப்பிடும் இடமாக, இளைப்பாற புளியமரம் கொண்டதாக அவ்விடுதி இருப்பதைக் கண்டேன்.*

*சமீபத்தில் அந்தக் கடையை யாரோ நடத்திட வேண்டும்; ஒன்றும் சரியில்லை. தென்*

மாவட்டத்திலிருக்கும் திருமங்கலம் பக்கத்து ஊரிலிருந்து வந்து அந்த உணவு விடுதியை நடத்திய, என்னுடன் தனது வாழ்வின் சுக துக்கம், மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்ட ரெட்டியார் எங்கே போனார்?

தனியார் பொறியியற் கல்லூரிகள் தனது மாணவர்கள் சேர்க்கை குறைவதால் விற்கப் படுவதாகச் சொல்லப்படுகிறது. நண்பர் ரெட்டியாரும் இந்த காலச் சூழலில் சிக்கி இருப்பாரோ!

இப்போது இந்த உணவு விடுதியில் ஒரு முறை சாப்பிட்டவர்கள் மீண்டும் சாப்பிட அங்கே வர வாய்ப்பில்லை. இந்த விடுதியை நடத்துபவரகள் தரக்கொள்கை, தரக் கட்டுப்பாட்டு, உணவினா சுவை அப்படி !

தேசிய நெடுஞ்சாலையில் தங்க நாற்கரச் சாலையில் விடுதி நடத்த 10 x 20 சதுர அடிகள் இடம் கிடைத்தால் மட்டும் போதாது நண்பர்களே!

* * * * *

## 2. சென்னை - மதுரை தேசிய நெடுஞ்சாலை

உளுந்தூர்பேட்டை சுங்கச்சாவடியில் பனங்கிழங்கு, கொய்யாப்பழம் வாங்கி விட்டோம். சில்லறை வர்த்தகத்தில் சில்லறைக் காசுகளைப் பொறுக்கியெடுத்துக் கொடுத்தாச்சு !

பக்கத்துக் கடையில் / உணவகம். கடை திறந்து சில ஆண்டுகளுக்கு மேலாக ஆயிற்று. அக்கடையில் காபி குடித்து மீண்டும் கிளம்புவது வழக்கம்.

வண்டியை நிறுத்திவிட்டு ஓட்டுநரும் நானும் காபி குடிச்சாச்சு !

அட்டையை எடுத்துக் கொடுத்தால், "மிஷன் இல்லீங்க".

"நெசமாகவே இல்லை"

"நெசமா இப்போது தான் மிஷினுக்கு ஆர்டர் கொடுத்திருக்கோம்".

- - - - - -

இத்தனைக்கும் பெரிய கடை !

என்ன செய்வது ?

*** இதனால் அறியப்பட்ட நீதி யாது ? ***

16.12.2016 வெள்ளிக்கிழமை !

வாழ்த்துகள் !

* * * * *

## இந்நூலாசிரியரின் பிற நூல்கள்



### முனைவர் செ. இராஜேஸ்வரி

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

*1-21.* வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் *21* நூல்கள்.

*22.* சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்

**ஆங்கிலம்>தமிழ்**

*23.* Indian Women-Changes and Challenges (Co-Author)

*24.* The Globalisation : An Urban Theology

*25.* Water Privatisation (for PET, Madurai)

*26.* Assisted reproductive technologies and its Impact on Women (SIRD, Madurai)

*27.* Eco Vision and Mission

*28.* Bachelor's Study Materials for Social Science [IGNOU, Madurai] and others...

**தமிழ் >ஆங்கிலம்**

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகள்**

*29.* Shade of the Flowering Tree

*30.* Songs of Dryness

*31.* Speaking with You

*32.* Language of Love

*33.* A Lady at the little gate

*34.* Honey Hive

*35.* Ambrosial Kiss (Editor)

*36.* Therapisit of the Finest Art

*37.* Following Dusty Feet (in print)

**பேரா. முனைவர் ஞானசேகரனின் நூல்கள்**

*38.* Emerging Mallarism

*39.* Festival of Lord Indra

*40.* Role of Devendirars in Indian war of Independence (Sundaralingam)

*41.* Mallariyan Literature

*42.* Re reading of Pallu literature

*43.* Frontyard without My Dad (Poem)

**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

*44.* பண்பாட்டு நகர்வுகள் (தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு

*45.* பெண் தெய்வ வழிபாடு

*46.* தேவேந்திரன்

*47.* மருதநிலப் பெண் தெய்வங்கள்

*48.* இருநிலத்தில் திருமுருகன்

*49.* முன்னோர் வழிபாடு

*50.* வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்

*51.* யானைக் கடவுள்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

*52.* பாடுபொருளும் பாசப்பொருளும்

*53.* பூ மர நிழலின் களமும் காலமும்

*54.* "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு

*55.* கவிதையில் காதல்

*56.* கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள்**

*57.* மொழிபெயர்ப்பியல் ஆய்வு

*58.* கவிதை மொழிபெயர்ப்பு

*59.* நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் *(Co-author)*

**ஆங்கிலக் கவிதை மொழிபெயர்ப்பு**

*60.* எட்டுத்திக்கும் செல்வீர்

*61.* அவன் கடவுளுக்கு நிகரானவன்

*62.* செக்கச் சிவந்த ரோஜா

*63.* மணலும் நுரையும் - கலீல் ஜிப்ரான்

*64.* பாடல்கள் 14 - கலீல் ஜிப்ரான்

**சிறுகதைத் தொகுதி**

*65.* அமராவதியின் காதல்




₹.200